


# கல்கி

KALKI 14-6-81 ரூ. 1.20





# பணத்தை ஏன் விரயமாக்குகிறீர்கள்

எவ்விதத்திலும் சிறப்பில்லாத 'விலையுயர்ந்த'
துலக்கும் பவுடரை வாங்கி



வாங்குவீர்

# பிஜ்

## மற்றதைவிட விலையில் 25% குறைவு
## இருப்பினும் நன்றாகவே துலக்குகிறது







உங்களுடைய
சிறந்த பீங்கான்,
சமையலறைப்
பாத்திரங்களுக்கு
நம்பகமானது

கோத்ரெஜ்
தயாரிப்பு

CASGS-132-183 TAM



# சாமியை வேண்டிக்கிறீங்களா?

எம் பேரு விஜயா. நான் மந்தவெளிலே உள்ள செயிண்ட் ஜான் மிடில் ஸ்கூல்லே படிக்கிறேன். இந்த வருஷம் மூணாவது கிளாஸிலேருந்து நாலாவது கிளாசுக்குப் போகணும். ஏனோ தெரியலே கிளாஸ் மாறறத்துக்குப் பதிலா நான் ஸ்கூலே மாறணும்கிறாங்க எல்லாரும். நான் மட்டுமில்லே. என்னோட சேர்ந்து மற்ற 651 குழந்தைங்களும் வேறே ஸ்கூலுக்குத்தான் போயாகணுமாம். ஏன்னு கேட்டா, கவர்ன்மெண்டுக்கும் ஸ்கூலுக்கும் ஏதோ தகராறும். அதனாலே ஸ்கூலையே இழுத்து மூடிட்டாங்களாம்.

''ஜூன் மாசம் நாலு தேதி ஆயிடுச்சு. இப்பப் போய் எந்த ஸ்கூல்லே உன்னைச் சேர்க்க முடியும்னு'' எங்கம்மா என்னையே கேக்கறாங்க. அழுதுக்கிட்டே கேக்கறாங்க. எனக்கும் அழுகையா வரது. எனக்கு அப்பா கிடையாது. மாமா மட்டும்தான் இருக்காரு. ராமன் மாமா ஒரு போலீஸ்காரரு. அம்மாவும் மாமாவும் சேர்ந்து என்னைச் சேர்க்கறதுக்கு ஸ்கூல் ஸ்கூலா அலையறாங்க.

எங்க ஸ்கூல்லே ஒண்ணாங் கிளாஸ்லேருந்து எட்டாங் கிளாஸ் வரை இருந்தது. நாலு டீச்சருங்களை எங்க ஸ்கூல் வெளியே அனுப்பிச்சது. அவங்களைத் திரும்பவும் சேர்த்துக்கணும்னு சர்க்காரிலே சொன்னாங்களாம். ஒழுங்கு முறை கெட்டுப் போயிடும் அதனாலே அவங்களைச் சேர்த்துக்க மாட்டோம் அப்படீன்னு பள்ளிக்கூட நிர்வாகம் பதில் சொல்லித்தாம். சண்டை கொஞ்சம் கொஞ்சமாப் பெரிசாகி கடைசிலே ஸ்கூலையே இழுத்து மூடிட்டாங்க. மூடப் போறோம்னு சர்க்காருக்கு ஜனவரி மாசமே பள்ளிக்கூடத்திலேருந்து எழுதியிருந்தாங்க. ஆனா போன மாசம் 27ந் தேதிதான் சர்க்கரர் அதுக்கு அனுமதி கொடுத்தாங்களாம்.

''யாரும் கவலைப்பட வேண்டாம். இந்தப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த எல்லாப் பிள்ளைங்களையும் கார்ப்பரேஷன் ஸ்கூலு, கவர்ன்மெண்ட் ஸ்கூலுன்னு எதிலேயாவது சேர்த்துக்கணும்னு நாங்க உத்தரவு போட்டிருக்கோம்''னு சர்க்காரிலே சொல்றாங்க. ஆனா இது நடக்குமான்னு பிள்ளைங்களோட அப்பா அம்மாக்கெல்லாம் கவலையா இருக்கு. அப்புறம் எல்லா ஸ்கூலும் ஒரே மாதிரி இருக்காதாமே? இந்தப் பள்ளிக்கூடத்தின் தரம் எல்லாத்திலேயும் எதிர்பார்க்க முடியாதாமே! பேசிக்கறாங்க.

ஆக மொத்தத்தில் இவங்களுக்குள்ள இருக்கிற சண்டையிலே நடுவிலே மாட்டிண்டு முழிக்கிறது நாங்கதான். எனக்குக் கவலையா இருக்கு. எங்க எல்லாருக்கும் நல்லபடியா பள்ளிக்கூடங்களில் இடம் கிடைக்கணும்னு வேண்டிக்கிறீங்களா? பிராமிஸ்ஸா சொல்றேன், இடம் கிடைச்சதுன்னு நல்லா படிச்சுப் பாஸ் பண்ணுவோம்!

பேட்டி : அசோக்குமார்

புகைப்படம் : மார்ட்டின்

# பள்ளிக்கூடங்கள் படுத்தும் பாடு!



○ திரு. ஏ. கிருஷ்ணஸ்வாமி



○ திரு. வேங்கட சுப்பிரமணியம்

ஜூன் மாதம் வந்து விட்டாலே, பள்ளிக் கூடங்கள் திறக்கப் போகின்றனவே என்ற பீதி பெற்றோரிடம் கிளம்பும். டொனேஷன், புத்தகங்கள், நோட்டுகள், சீருடைகள் என்று நோட்டுக்களை வாரி வீச வேண்டுமே என்ற கவலை முகத்தில் தேங்கிக் கிடக்கும்.

இப்படிப்பட்ட பெற்றோர்கள் சிலர் பொதுவாகச் சொல்லிய குறைகள்:

'ஏதோ, நல்ல — பெயர் பெற்ற — பள்ளிக்கூடமாக இருக்கிறதே என்று குழந்தைகளைச் சேர்க்கப் போனால், ஐந்நூறு கொண்டுவா, ஆயிரம் கொண்டுவா' என்று டொனேஷன் கேட்கிறார்கள். வரதட்சிணை ஒழிப்பு இயக்கம் மாதிரி இந்த நன்கொடை ஒழிப்பு இயக்கம் யாரும் துவங்க மாட்டார்களா? சரி, கேட்டதைக் கொடுத்துப் பள்ளியில் சேர்த்துவிட்டால் அத்தோடு விடுகிறார்களா? 'நாடகம் போடுகிறோம் கட்டிட நிதிக்காக. டிக்கட்டுகள், ரூ. 25, 50, 100 பிடி ஒரு புத்தகம் விற்றுப் பணத்தைக் கொண்டுவா!' என்று குழந்தைகளிடம் கொடுத்து விடுகிறார்கள். வீடு வீடாகப் போய் டிக்கட்டு விற்கப் பயந்து, நாங்களே டிக்கட் பணத்தையும் தண்டமாக அழுகிறோம்!

'வீட்டிலிருந்து சமோசா செய்து கொண்டு வா, ஜிலேபி செய்து கொண்டு வாருங்கள். பள்ளிக் காம்பவுண்டுக்குள் காண்டீன் வைத்து இவற்றை விற்கலாம் — கட்டட நிதிக்காக' என்கிறார்கள்.

'பள்ளிக்கூடச் சம்பளம் வாங்குவதில் உச்சமாக எத்தனை வசூலிக்கலாமோ அதைக் கறந்து விடுகிறார்கள். ஸ்பெஷல் ஃபீஸ் தனியே! பம்பாய் மாதிரி, இத்தனை ரூபாய்க்கு மேல் ட்யூஷன் ஃபீஸ் வாங்கக் கூடாது என்று சட்டம் கொண்டு வந்தால் என்ன?

'நோட்டுப் புத்தகங்களுக்காகவும், புத்தகங்களுக்காகவும் வசூலிக்கிற தொகைகூடச் சற்றுக் கூடுதலாகவே இருக்கிறது. லாப — நஷ்டமில்லா நோக்கோடு இவற்றை விற்றால் என்ன?'

சரி, ஆசிரியர்கள் என்ன சொல்கிறார்கள்?

'சம்பளம் ஒன்றும் பிரமாதமாகத் தருவதில்லை. (ஏன், சில அங்கீகாரமற்ற பள்ளிகளில் 80 ரூபாய் சம்பளமாம். பத்துமாணவர்களிடம் 30 ரூபாய் வீதம் தனி ட்யூஷன் வைத்து 300 ரூபாய் பெற்றுக்கொண்டு அதிலும் ஒரு பங்கை நிர்வாகத்திடம் கொடுத்துவிட வேண்டுமாம்!) குறைவான சம்பளம் கொடுத்துவிட்டு, அரசு நிர்ணயித்த சம்பளம் பெற்றுக் கொண்டதாகக் கையெழுத்திட்டுக் கொடுக்க வேண்டும்!

'விடுமுறை எடுக்கவே முடியாது. இரண்டு நாள் சற்றுத் தாமதமாக வந்தால் ஒரு நாள் சம்பளம் கட்!

'வேலைச் சுமையோ சொல்லி மாளாது. வாரத்தில் 35 பீரியட்களுக்கு மேல் எடுத்தாக வேண்டும். வேறு பள்ளிகளுக்கு வேலைக்குப் போய்விடாமல் இருக்க, சர்ட்டிபிகேட் எல்லாவற்றையும் நிர்வாகத்தினரிடம் ஒப்படைத்து விட வேண்டும்.

இழியாமல், தொலைக்காமல் திரும்பக் கிடைத்தால் பாக்கியம்!''

சரி, இந்தக் குறைகளையெல்லாம் பள்ளித் தலைமை ஆசிரியரிடம் அல்லது தலைமை ஆசிரியையிடம் கொட்டிச் சாய்க்கலாம் என்று போனால், அவர்கள் தங்கள் கஷ்டங்களை யாரிடம் சொல்லுவோம் என்று காத்திருந்தது போல், சில குறைகளைத் தெரிவித்தார்கள். உருப்படியான யோசனைகளையும் சிலர் சொன்னார்கள்.

கல்வித் துறையில் 32 வருடங்கள் அநுபவம் பெற்றிருக்கும் வடபழனி சரஸ்வதி வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளித் தலைமை ஆசிரியை ஸ்ரீமதி சரஸ்வதி:

''என் மாணவிகளோடு நான் நேரடியாகத்தொடர்பு வைத்திருக்கிறேன். அதனால் மற்ற பள்ளிகளில் இயங்கும் பெற்றோர் — ஆசிரியர் சங்க அமைப்பு இந்தப்பள்ளியைப்

○ ஸ்ரீமதி சரஸ்வதி



○ ஸ்ரீமதி ராதாராவ்





பொறுத்தவரை அவசியமில்லாதது. அரசாங்க கிராண்ட் அறவே கிடையாது. மாணவியர் கட்டும் சம்பளப் பணத்திலேயே இது இயங்குகிறது. தவிர நன்கொடை தர விரும்புபவர்களிடம் பள்ளி அபிவிருத்திக்காக வாங்குவதில் என்ன தவறு?

"எந்தத் தொழில் செய்யவும் லைசென்ஸோ, பெர்மிட்டோ, தேவை. பள்ளிக்கூடங்கள் தொடங்க மட்டும் எதுவும் வேண்டாம். பாருங்களேன், அங்கீகாரமற்ற பள்ளிக்கூடங்கள் காளான்களாய் எத்தனை முளைத்திருக்கின்றன!

"ஐம்பத்தெட்டு வயதில், ரிடயர் ஆகிற சமயத்தில் ஜனாதிபதி அவார்டு கொடுக்கிறார்களே, அதை நாற்பது வயதுக்குள் கொடுத்தால் என்ன? மீதி வருஷங்களை உற்சாகமாக அந்த ஆசிரியர் கல்விப் பணியில் செலவிடவும், மற்ற சக ஆசிரியர்களுக்கு ஒரு தூண்டுகோலாகவும், உந்துதலாகவும் விளங்குமல்லவா?

"கற்றுத் தேர்ந்த பெற்றோர் உள்ள குடும்பத்திலிருந்து வரும் குழந்தைகளை மட்டுமே கான்வென்ட்களிலும், பெயர் பெற்ற சில பள்ளிகளிலும் சேர்த்துக் கொள்கிறார்கள். என் பள்ளியில் அப்படி இல்லை. நான் மாணவியின் பின்னணியைப் பார்ப்பதில்லை. விறகு தொட்டி வைத்திருப்பவரின் மகள் என் பள்ளியில் பயிலுகிறாள். சயன்ஸில் 50க்கு 50 வாங்கியிருக்கிறாள்! கல்விப் பின்னணியே இல்லாத அரசியல்வாதி ஒருவரின் குழந்தையும் இங்கே பயிலுகிறாள். தமிழிலும் ஆங்கிலத்திலும் பேசி, ரமண கேந்திரா





அளித்த பரிசுகளைத் தட்டிக் கொண்டு வந்திருக்கிறாள்!"

ஆதர்ச வித்யாலயா மெட்ரிகுலேஷன் ஹையர் செகண்டரி பள்ளித் தலைமை ஆசிரியை ஸ்ரீமதி ராதாராவ் புன்சிரிப்புடன் கேள்விகளுக்குப் பதில் அளித்தார். தமது ஸ்தாபனத்தின் நிர்வாகிகளை மனம் திறந்து பாராட்டினார்.

"எங்கள் பள்ளியில் நன்கொடை வாங்குவதே இல்லை. எங்களுக்குத் தேவையும் இல்லை. நன்கொடை கொடுத்தால்தான் இடம் கிடைக்கும் என்று ஒரு தவறான கருத்தும் மக்களிடையே இருக்கிறது.

"இங்கே பெற்றோர் – ஆசிரியர் சங்கம் நன்றாகவே இயங்குகிறது. சகல விதமான குறைகளும் இதில் அலசப்படுகின்றன. எங்கே குறைகள் சொன்னால் பள்ளி நிர்வாகம் தம்மீது காட்டமாகிவிடுமோ என்று யாரும் பயப்படுவதில்லை. எத்தனையோ பிரச்னைகளுக்குத் தீர்வும் காணப்பட்டிருக்கிறது. ஆசிரியர்களுக்கு நல்ல ஊதியம் கொடுக்கிறோம். அவர்களுக்கு ஏதேனும் குறைகள் இருக்கும் பட்சத்தில் அவற்றைத் தெரிவிக்க அவர்களது அஸோஸியேஷன் இயங்குகிறது.

"ஐந்நூறு மாணவர்களுக்கு உதவும்படியாக புக் பாங்க் நடத்துகிறோம். எத்தனை பள்ளிகளிலிருந்து ஏழை மாணவர்கள் பயன் அடைகிறார்கள்!

"வருடத்தில் சுமார் ஒரு லட்சம் ரூபாய்க்கு ஈடாக இலவசச் சம்பளச் சலுகை கொடுக்

கிறோம். 3 அல்லது 6 மாதத்துக்கு ஒரு முறை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலிருந்து நிபுணர்களை வரவழைத்து எங்கள் ஆசிரியைகளுக்கு விசேஷப் பயிற்சி கொடுத்து வருகிறோம்.''

ஆக, சர்க்கார் மான்யம் பெறாத பள்ளித் தலைமை ஆசிரியைகளில் ஒருவர் வசதியுள்ளோரிடமிருந்து நன்கொடை வாங்குவதில் என்ன தவறு என்று கேட்கிறார். இன்னொருவர் நன்கொடையே வாங்குவதில்லை என்கிறார்.

சர்க்கார் மானியம் பெறும் தனியார் பள்ளிகளிலும் நன்கொடைப் பிரச்னை இருக்கிறது என்றே தெரிகிறது. இல்லாவிட்டால் கல்வித் துறை இயக்குநர் சமீபத்தில் பத்திரிகைகள் வாயிலாக அறிக்கை விட்டிருப்பாரா?

கல்வித் துறை இயக்குனர் டாக்டர் கே. வேங்கடசுப்பிரமணியம் அவர்களைச் சந்தித்த போது, அவர் வெளியிட்ட கருத்துக்கள்:

''நன்கொடைப் பிரச்னை அரசாங்கப் பள்ளிகளைப் பொறுத்தவரை அறவே இல்லை என்று சொல்லுவேன். அரசு மான்யம் பெறும் பள்ளிகளிலும் இதைத் தடுக்க முயற்சிகள் எடுத்திருக்கிறோம். நன்கொடை வசூல் ஒரு நோய் என்றே சொல்லலாம்.

''அங்கீகரிக்கப்படாத ஒரு தனியார் பள்ளியில் வெறும் விண்ணப்பத் தாளுக்கே நூறு ரூபாய் வாங்குகிறார்களாம். இன்னொரு அங்கீகரிக்கப்படாத பள்ளியில் டி.சி. வாங்க வேண்டுமானால், இருநூறு ரூபாய் கொடுக்க வேண்டுமாம்! இதே மாதிரி ஒரு பள்ளியில் இரண்டு வருஷத்துக்கான பள்ளிச் சம்பளத்தை முன்னாலேயே வாங்கிவிடுவதாகக் கேள்விப்பட்டேன்.

''ஆங்கில வழிக் கல்வியில் மக்களுக்கு இருக்கிற அலாதி மோகமே இப்படிப்பட்ட அங்கீகரிக்கப்படாத தனியார் பள்ளிகள் காளான்களாக வளர வித்திடுகிறது. வீதிக்கு ஒன்றாக முளைத்திருக்கும் நர்சரி பள்ளிகளும் தங்கள் குழந்தைகள் மம்மி என்றும் டாடி என்றும் அழைக்க விரும்பும் பெற்றோர்களின் கண்மூடித்தனமான ஆங்கில மோகத்தின் காரணமாகவே தழைத்துப் பெருகி வருகின்றன. இம்மாதிரி தனியார் பள்ளிகளில் வசூலிக்கும் நன்கொடைகளை, பள்ளிகள் திறக்கும் சமயத்தில் இன்கம்டாக்ஸ் இலாகாவினர் கண்காணித்தால் நாட்டுக்கு நல்லது!

''காலப் போக்கில் தனியார் பள்ளிகளின் மீது மக்களுக்கு இருக்கிற மோகம் குறைந்து, அரசினர் பள்ளிகள்பால் முழுக் கவனமும், தீவிர ஆதரவும் மக்களிடமிருந்து கிடைத்து விடும் என்றே சொல்வேன்.''

கல்வித் துறை இயக்குநர் அரசுப் பள்ளிக்கூடங்களைக் குறிப்பிட்ட பிறகு, அவற்றையும் பார்த்துவிடலாம்என்று புறப்பட்டோம்.

எழும்பூர் ரயிலடியை அடுத்த அரசினர் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் இரு நல்லி ராமனுஜன், தாம் இதுவரை பெரியார் மாவட்டம் கவுந்தம்பாடி உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராக இருந்ததாகவும், அங்கே பெற்றோர் - ஆசிரியர் சங்கம் உருப்படியான காரியங்களைச் செய்திருப்பதாகவும்

பெருமையோடு குறிப்பிட்டார். கடந்த வருடம் இந்தப் பள்ளி 'ஸீரோ' ரிசல்ட் கொடுத்தும், இன்று இதன் தரத்தை உயர்த்திக் காட்டத் தாம் முனைந்திருப்பதாகச் சொன்னார், நம்பிக்கையோடு.

நாங்கள் விசாரித்ததில் பெஸண்ட் நகர் ஊரூர்குப்பம் அரசாங்க உயர்நிலைப் பள்ளியில், அங்கே அத்தனை காலனிகள் இருந்தும், பெசண்ட நகரைச் சார்ந்த மாணவர் யாருமே அங்கே படிப்பதில்லையோ என்ற சந்தேகம் எழுந்தது. ஆனால் அங்கேயுள்ள மீனவர்களின் குழந்தைகள் அந்தப் பள்ளியில் படிப்பதாக அறிந்தோம்.

விருகம்பாக்கம் அரசினர் உயர்நிலைப்பள்ளியில் கட்டட வசதியே கிடையாது என்று சொல்லலாம். வெளிப் பார்வையிலேயே இது தெரிகிறது.

குரோம்பேட்டை அரசினர் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் திரு பி. ராதா கிருஷ்ணன் தெரிவித்த விவரங்கள்:

''எங்கள் பள்ளியில் 80 சதவீதம் ரிசல்ட் கிடைத்திருக்கிறது. மாணவர்கள் அக்கறையுடன் படிப்பவர்கள். ஆங்கில மீடியம் வகுப்புக்களுக்குத் தேவை இருக்கிறது. (80 மாணவர்கள் ஒரு வகுப்பில்!) ஆனால் இதற்கு மேல் ஏற்க முடியாத நிலையில் இருக்கிறோம். அறுபது எழுபது மாணவர்களைப் பரீட்சைக்கு நிறுத்தி வைக்க வேண்டிய நிலை வந்தபோது, காரணம் என்ன என்று விசாரித்ததில், இந்த மாணவர்களின் பெற்றோர்கள் டி.வி.தான் காரணம் என்றார்கள். டி.வி. ஆரம்பித்து விட்டால் படிப்பில் கவனம் செல்லுவதில்லை இவர்களுக்கு!''

சிறந்த கல்வியாளர் என்று பெயர் பெற்ற டாக்டர் ஏ. கிருஷ்ணசாமி அவர்களைச் சந்தித்தோம். அவர் அபிப்பிராயங்கள்:

''1859 முதல் பல்கலைக் கழகத்தின் கீழ் இயங்கிக் கொண்டிருந்த பள்ளிக்கூடங்கள், என்றைக்குத் தனியே பிரிந்து ஒரு துறையின் கீழ் இயங்க ஆரம்பித்தனவோ, அன்றைக்குப் பிடித்தது தலைவலி. பல்கலைக் கழகத்தின் கீழ் இயங்கியபோது இந்த மாதிரி தொண தொணப்பான மேற்பார்வை (Nagging supervision) இருந்ததில்லை.

''தமிழறிஞரும், தமிழ் போதனு மொழி வாதியுமான திரு அ.மு. பரமசிவானந்தம் அவர்கள் கூட, தாம் துவங்கியுள்ள பள்ளியில் ஆங்கில மீடியம் வகுப்புக்களையே வைத்திருக்கிறார். ஏனென்றால் அவர் பெற்றோர்களின் கருத்துக்கு மதிப்புக் கொடுத்திருக்கிறார்.

''ஆங்கிலக் கல்வி நமக்கு மிக முக்கியமானது. ஜப்பானில்கூட, தற்போது மிகப் பிரபலம் அடைந்துள்ள பொருளாதார அறிஞர்கள் எல்லாரும் ஆங்கிலத்தில் பயின்றவர்கள்தாம்.

''முந்நூறு கோடி ரூபாய் கல்வித் துறைக்குச் செலவழிக்கும் நாம், கல்வித் துறை இன்னும் சீராக இயங்க இரண்டு அமைச்சர்களைக் கல்வித் துறைக்கு நியமிக்க வேண்டும். ஒருவர் ஆரம்பக் கல்விக்கு, மற்றவர் உயர் கல்விக்கு.

''ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் தரம் இன்னும் உயர வேண்டும்.

''12 வயதுவரை மொழியில் பயிற்சியும் 12 வயதுக்குப் பிறகு பாடங்களில் (Subjects) பயிற்சியும் அளிக்கப்பட வேண்டும்.

''வீதிக்கு ஒன்றாக முளைக்கும் அங்கீகாரமற்ற தனியார் பள்ளிகளைத் தடுக்க அரசு ஏதேனும் வழி வகை கட்டாயம் செய்ய வேண்டும்.

''பள்ளிகளில் இன்ஸ்பெக்ஷன் தரம் மோசமாகவே இருக்கிறது. இது கவனிக்கப்பட வேண்டும்.''

இருபத்தியாறு மணி நேரத் தகவல் சேகரிப்புக்குப் பிறகு நமக்குத் தோன்றுகிற எண்ணம் இதுதான்:

பிரபலமடைந்திருக்கிற சில குறிப்பிட்ட தனியார் பள்ளிகளில் வசதியுள்ள பெற்றோர் தம் குழந்தைகளைச் சேர்க்கத் துடிக்கிறார்கள்; ஆர்வம் காட்டுகிறார்கள்.

மேற்படி பள்ளிகள் அரசாங்க மான்யமாக ஒரு பைசாக் கூடப் பெறாத நிலையில் பெற்றோர்களிடமிருந்து நன்கொடைகளும், கூடுதலான சம்பளமும் வசூலிக்கத் துணிவு பெறுகின்றன.

தனியார் பள்ளிகளில் கல்வியின் தரம் மட்டுமல்ல, கற்பிப்போரின் தரமும் சற்று உயர்வாக இருக்கிறது என்பதால் பெற்றோர் தமது கஷ்டங்களை வாய் விட்டு அரற்றினாலும் குழந்தைகளின் எதிர்காலம் கருதி அங்கேயே சேர்க்கிறார்கள்.

வீதிக்கு ஒன்றாக முளைத்திருக்கும் நர்சரிப் பள்ளிகள் இந்நிலையைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, பணம் பறிக்க அடித்தளம் போடுகின்றன. பயிற்சி பெறாத ஆசிரியைகள், அந்த ஆசிரியைகளுக்குக் குறைவான சம்பளம் போன்ற குறைகள் இங்கேதான் ஆரம்பமாகின்றன.

—தொகுப்பு: சாருகேசி, தமயந்தி

மேலட்டை வண்ணப்படம்: ஹரிலிங்கம்

கார்ட்டூன்: உமாபதி



டி. ஏ. பாய் போன்ற சாதனையாளர்கள் மரணமடையும்போது தலைவர்கள் அனுதாப அறிக்கை வெளியிட்டால் மட்டும் போதாது. நம்மிடம் என்ன குறைகளை அந்த மேதைகள் கண்டார்கள்; முன்னேற என்ன வழிகளைச் சொன்னார்கள் என்றும் பார்க்க வேண்டும்.

# நாம் ஏன் ஏழைகளாகவே இருக்கிறோம்?

● டி.ஏ.பாய் ●

வீடு பற்றி எரியும்போது பீடிக்கு நெருப்புக் கேட்டவன் கதையாக நாம் நடந்து கொள்கிறோம். நமது பிரச்னைகள் மலை போன்றவை. அவற்றுக்குத் துரித கதியில் தீர்வு காணும் மனமோ சுறுசுறுப்போ நமக்கு இல்லை.

கோடிக்கணக்கான மக்கள் வறுமையில் வாடும்போது ஒரு மொழியின் உயர்வை உணர்த்த உலக மகாநாடுகள் கூட்டிக் கோடிக் கணக்கில் செலவழிக்கிறோம். ஆசிய விளையாட்டுப் போட்டிகளை நடத்த முன் வருகிறோம்.

காந்திய சோஷலிசம், காந்திய பொருளாதாரம் என்றெல்லாம் அலகுகிறோம். ஆனால் காந்திய நேர்மையை, சத்தியத்தைக் கைவிட்டு விட்டோம்.

சாதனை புரிய வேண்டும், சாதனையில் பெருமிதம் கொள்ள வேண்டும் என்ற எண்ணமே நமக்கில்லை.

ஜனதா, காங்கிரஸ் ஆட்சியையும், காங்கிரஸ் ஜனதா ஆட்சியையும் குறை கூறுவதுடன் சரி.

இந்த நிலையேதான் நீடிக்கும் — நமது தோல்விகளையும் குறைகளையும் ஒப்புக் கொள்கிற துணிவும், நமது பிரச்னைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என்ற மனப்பூர்வமான ஆசையும் முயற்சியும் நமக்கு இல்லாது போனால்.

சட்டத்தின் ஆட்சி பற்றி எல்லாரும் பேசுகிறார்கள். ஆனால் சட்டம் சிலர் செய்யும் அநீதிகளுக்கு மட்டும் தலைவணங்கி வழி விடுகிறது. இத்தகைய சட்டத்தை மக்கள் எப்படி மதிப்பார்கள்?

பல்வேறு நாடுகளுடன் பல்வேறு திட்டங்களுக்கு ஒப்பந்தங்கள் கையெழுத்தாவது பற்றிப் பத்திரிகைகளில் படிக்கிறோம். நான் அமைச்சராக இருந்தபோது ருஷ்யாவுடன் திறந்தவெளி சுரங்கங்களுக்காக ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. ஆறு ஆண்டுகள் சென்றன. ஒன்றும் நடக்கவில்லை. மறுபடி சமீபத்தில் இன்னொரு ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளது, — அதே காரியத்துக்காக!

(பம்பாய்) கல்யாண் ரயில்வே நிலையத்தை மின்சார மயமாக்க ஒரு திட்டத்தை அங்கீகரித்து அமைச்சர் என்ற முறையில் கையெழுத்துப் போட்டேன். ஏழு ஆண்டுகளுக்குப் பின் அதே ஃபைல் என்னிடமே திரும்பி வந்தது. அதிகரித்துவிட்ட செலவுக்கு அனுமதி கேட்டு வந்தது. 'காலா காலத்தில் வேலையை முடித்திருந்தால் இந்த அதிகப்படி செலவைத் தவிர்த்திருக்கலாமே? ஏன் தாமதம்?' என்று வினவினேன். மூன்று ஆண்டுகளுக்கு ஃபைல் காணாமல் போய்விட்டதாகவும், பிறகு அகப்பட்டதாகவும் பதில் கிடைத்தது!

எந்தத் திட்டத்தையும் நாம் குறித்த காலத்துக்குள் முடிப்பதில்லை. ஜப்பான் 36 மாதங்களில் ஓர் எஃகு ஆலை அமைக்கிறது. பொக்காரோ எஃகு ஆலையை 15 ஆண்டுகளாக நாம் உருவாக்கி வருகிறோம். இன்னும் முற்றுப்பெறவில்லை. கோடிக் கணக்கான ரூபாய்களை விழுங்கியும் அது போதிய அளவு எஃகு உற்பத்தி செய்யவில்லை.

மின் நிலையங்கள், எஃகு ஆலைகள் போன்றவற்றில் எப்போதும் நிலக்கரி தட்டுப்பாடு. ரயில் வாகன் இருந்தால் நிலக்கரி இல்லை. நிலக்கரி இருந்தால் ரயில் வாகன் இல்லை. இரண்டு அமைச்சரவைகளும் ஒன்றுக்கொன்று அனுசரணை!

○ டி. ஏ. பாய்



ஓர் ஆலே அமைப்பதில் கால தாமத மானுல் தாமதமாகிற காலகட்டத்தில் விலே வாசிகள் உயர்வதற்கு ஏற்ப மூலதனத் தேவை அதிகரித்து விடுகிறது. இதனுல் ஏற்படும் நஷ்டம் உணரப்படுவதே இல்லே. அதிகரித்த மூலதனத் தேவைக்கு அனுமதி பெற ஃபைல்கள் திரும்பத் திரும்ப அமைச்சர்களிடம் வந்த வண்ணம் இருக்கின்றன.

நமது மின்வாரியங்களின் நிலே வெட்கக் கேடானது. மின் நிலேயங்களின் உற்பத்தித் திறனில் 40 சதம்கூட உற்பத்தியாவதில்லே. இது தவிர விநியோகத்தில் ஏகப்பட்ட மின் சாரம் விரயமாகிறது. இந்த நஷ்டங்களே யெல்லாம் தவிர்க்க நாம் தயாராக இல்லே.

தேர்தல் முடிந்து பதவிக்கு வந்ததும் அரசியல்வாதியின் முதல் கவலே அடுத்த தேர்தலில் எப்படி வெற்றி பெறுவது என்பதுதான்!

மக்களுக்குப் பொதுச் சொத்தில் மதிப்பில்லாமல் போனதற்குக் காரணம் அரசியல் வாதிகளே. ஏதோ ஒரு சாக்கு அகப்பட்டால் போதும், உடனே பஸ்ஸைக் கொளுத்து, ரயில்வே ஸ்டேஷனே நொறுக்கு, அல்லது தபால் நிலேயத்தைத் தாக்கு என்று செயல்படுகின்றன அரசியல் கட்சிகள்.

ஸ்விட்ஜர்லாந்து தேசம் தனது தேசிய தினத்தின்போது கூட விடுமுறை விடுவதில்லே. நமக்கோ 365 நாளில் 150 நாள் விடுமுறை. அதனே மேலும் அதிகரிக்கவே முயல்கிறோம். போதாக் குறைக்கு மறியல், கதவடைப்பு, வேலே நிறுத்தம், லாக் அவுட் இத்யாதி.

ஐந்தாண்டுத் திட்டங்களே வகுத்து அமல் படுத்துகிற திட்டக் கமிஷனுக்கே நமது தேசத்தின் உற்பத்தியில் ஆண்டுக்கு மூன்று சதவீதத்துக்கு மேல் வளர்ச்சி காண முடியும் என்ற நம்பிக்கை இல்லே. — இதுவும் பருவ மழை பொய்க்காமல் இருந்தால்தான்!

தலேவர்களாயினும் சரி, மக்களாயினும் சரி நமது மனப்பான்மையே அடியோடு மாறினுலன்றி நமது பிரச்னேகளுக்குத் தீர்வு காணவே முடியாது. இந்தத் தலேமுறையினரின் மனப்போக்கில் மாற்றம் ஏற்படும் என்று தோன்றவில்லே.

இளேய பாரதத்தினராவது மெத்தனமாயிராமல் சவால்களே ஏற்பார்கள் என்று நம்புகிறேன்.

நன்றி: இல்லஸ்டிரேட்டட் வீக்லி, மார்ச் 1, 1981

தமிழாக்கம்: குட்டி கிருஷ்ணன்

---

இந்த வார டீ.வி. சினிமா

## "இதயத்தில் நீ!"

முக்தா பிலிம்ஸ் தயாரிப்பான இந்தப் படத்தில் ஜெமினி கணேசன், தேவிகா, எம். ஆர். ராதா முதலானேர் நடித்துள்ளார்கள். 1963ம் ஆண்டு வெளியானது. உங்களுக்காக ஆனந்த விகடன், தினமணி, கல்கி பத்திரிகைகளேப் புரட்டியபோது, விமரிசனங்களில் ரசித்த இடங்கள் இவை:

**தினமணி**

பாட்டுப் புத்தகத்தில் உள்ள கதைக் கருக்கம் ரசிக்கும்படி உள்ளது. ஆனுல் திரையில் காணும் கதை அப்படி இல்லேயே! ஒரே குளறுபடி. திரைக்கதையாக்கியவரின் கை வரிசையா?



சினிமா உலகுக்குப் புதியவரான கவிஞர் வாலியின் வரவு வரவேற்கத் தக்கது. ''பழகி வந்த புதிய சுகம்'', ''யார்சிரித்தால்என்ன?'' பாடல்கள் அவர் திறமையை வெளியிடுகின்றன. ஆனுல் பாட்டுக்களின் இசையை அமைத்த சங்கீத இரட்டையர், ரஸிகர்களின் இதயத்தில் இன்பத்தை அளிக்கத் தவறியிருக்கின்றனர்.

**கல்கி**

ஒரு வாலிபன் என்ருல் ஒரு பருவப் பெண்ணேக் காதலித்து, கண்ட கண்ட இடங்களிலெல்லாம் அவளோடு கனியாட்டம் போடுவதுதான் அவன் வேலே. ஒரு பெண் என்ருல் காதலனேடு ஓடியாடிக் குலாவுவதுதான் அவள் வேலே. காதலேத் தவிர வேறு எத்தனே உயர்ந்த பாசங்கள் உலகில் இருக்கின்றன? மூச்! அவைகளேப் பற்றிப் பேசக்கூடாது. முக்தா பிலிம்ஸின் ''இதயத்தில் நீ'' படத்தில் வரும் காதல் காட்சிகளுக்கு முடிவே இல்லேயா என்று தோன்றுகிறது.

**ஆனந்தவிகடன்**

விளம்பரம் மட்டும்தான்... விமரிசனம்? தேவையில்லே என்று விட்டு விட்டார்களோ?

—''சிக்கி''




லண்டன் டெய்லி மெய்ல் காரியாலயத்தில் ஆசிரியர் குழாம் பணியாற்றும் பகுதியில் சுவரில் ஆளுயரத்துக்கு ஒரு பெண்ணின் புகைப்படம் பொருத்தப்பட்டிருக்கும். அந்தக் காரியாலயக் கட்டிடத்தைப் பெருக்கித் துடைத்துச் சுத்தப்படுத்தும் பெண்ணின் படம் அது! அதன் குறுக்காக "நினைவிருக்கட்டும்! நீங்கள் பத்திரிகையை உருவாக்குவது இவள் படிப்பதற்காகத்தான்!" என்று எழுதப்பட்டிருக்கும்.

இந்தக் கொள்கைப்படி இந்தியாவில் முதன் முதலாகப் பத்திரிகை நடத்தி அபார வெற்றி கண்டவர் ஆதித்தனார்.

கவிதையை எளிமையாக்கி யாவரும் ரசிக்கச் செய்தவர் பாரதி.

உரைநடையை இலகுவாக்கி அனைவரையும் விரும்பிப் படிக்கச் செய்தவர் கல்கி.

செய்திகளைச் சுவைபடத் தந்து பாமரரிடமும் பொது அறிவை வளர்த்தவர் ஆதித்தனார்.

தினத்தந்தியில் கருத்தைவிட கவர்ச்சி அதிகம் என்பார் சிலர். கவர்ச்சி காட்டி கருத்தைச் சொல்ல வந்தார் ஆதித்தனார் என்று இதற்குப் பதில் கூறுவோரும் உண்டு. இந்தக் கவர்ச்சி பாமரரை மட்டுமின்றிப் படித்தவரையும் ஈர்த்தது.

உயர் வகுப்பினர் தினத்தந்தி படிக்க மாட்டார்கள் என்று ஒருவர் ராஜாஜியிடம் குறிப்பிட்டபோது மூதறிஞர் வேடிக்கையாகச் சொன்னார்: "படிக்காமலென்ன, ஹிந்து பேப்பருக்கு இடையில் வைத்துக் கொண்டு படிப்பார்கள்!"

இது எவ்வாறாயினும் நாளிதழைத் தொட்டுக்கூடப் பார்க்காத பலரை நாளிதழ் வாங்கிப் படிக்கச் செய்தவர் ஆதித்தனார் என்பது மறுக்க முடியாத உண்மை. கல்வி அறிவு அதிகமில்லாத மக்களைக் கொண்ட, வளர்ந்துவரும் நாட்டில் ஆதித்தனார் செய்தது மாபெரும் ஜனநாயகப் பணி.


ஆதித்தனார்

● ● ●

● எம். எல். ஏ.க்கள் சண்டை, சட்ட சபையிலிருந்து இப்பொழுது எம். எல். ஏ. ஹாஸ்டலுக்குப் பரவியுள்ளது! இந்த யுத்தத்தில் எம். எல். ஏ., எம். எல். சி.க்களுடன் அவர்களுடைய டிரைவர்களும் பங்கேற்க முன்வந்திருப்பது பெரிய முன்னேற்றம்!

ஒரு தி. மு. க. எம். எல். சி.யின் கார் டிரைவர் அ. இ. அ. தி. மு. க. எம். எல். ஏ. மீது புகார் செய்திருக்கிறார்! இந்த அ. இ. அ. தி. மு. க. எம். எல். ஏ.வோ டிரைவர் மீது புகார் கொடுத்திருக்கிறார்!

ஆகமொத்தம் ஆபாசப் பேச்சு, ஏச்சு, ஏகவசனங்கள், கைகலப்பு, அடிதடி, எம். எல். ஏ. ஹாஸ்டலுக்குச் சேதம். மக்கள் வரிப் பணம் நஷ்டம்.

மக்கள் பிரதிநிதிகளாக நாளை விளங்கப் போகிறவர்கள், கண்ணியம் காப்பார்களா, கௌரவமாய் நடந்துகொள்ளும் பண்பாடுடையவர்களா என்பதை யெல்லாம் அவர்களுக்குத்தொகுதி ஒதுக்குமுன்னரே தலைமைப் பீடம் கவனிக்க வேண்டும். இல்லாத போனால் கட்சிக்கும் மானக்கேடு. இத்தகையவர்களைத் தேர்ந்தெடுத்த மக்களுக்கும் வெட்கக்கேடு.

● ● ●

● பாரதம் மீண்டும் ஒரு செயற்கைக் கோளை விண்வெளியில் ஏவி, அது வெற்றிகரமாய் உலகைச் சுற்றிவரக் காண்கிறது. செய்தித் தொடர்புக்கும் இன்ன பல காரியங்களுக்கும் உதவும் செயற்கைக் கோள்களை நாம் கோடிக் கணக்கில் செலவு செய்து விண்ணுக்கு அனுப்பத் தேவையில்லை. அமெரிக்கா, ருஷ்யாவிடம் வாடகைக்குப் பெற்றுக் கொள்ளலாம். நேசப்பான்மையை அதிகரித்துக் கொண்டால் சல்லிசாகவே கிடைக்கும்.

ஆனால் செயற்கைக் கோள்களை விண்ணுக்கு அனுப்புவதில் வேறு ஒரு உள் நோக்கமும் உண்டு. நமது தேசப் பாதுகாப்புக்கு உதவும் சாதனைகள் இவை. தேசம் விட்டுத் தேசம் பாயும் ஏவுகணைகள் சீனாவிடம் உள்ளன. அணுகுண்டுகளைத் தாங்கி அவை நம் மீது பாய்கிற சக்தி படைத்தவை. எனவே நமது பாதுகாப்புக்கு, அவற்றை விண்ணிலேயே தாக்கி முறியடிக்கிற ஆற்றலை நாம் பெற வேண்டும். ரோகிணியை உயரே எடுத்துச் சென்ற ராக்கெட்டைச் சில மாறுதல்களுடன் ஏவுகணைகளாகவும் உபயோகிக்கலாம். ராக்கெட்டை இங்கிருந்தபடியே இயக்கித் திசை திருப்பி விரும்பிய இலக்கில் கொண்டு செல்கிற விஞ்ஞானக் கலையில் நாம் தேர்ச்சி பெறுவது பாதுகாப்பு நோக்கில் அத்யாவசியமாகிறது.



பங்களா
தேஷ்
ஆட்சி
பீடம்!




ஹி-ஹி..
அம்மா..
நமக்குள்ளே
சுமுகமான
உறவு
இருக்கே!
எங்களை அசைக்க முடியாது!
முயன்றால்.. ஒரு கை பார்த்து
விடுவோம்!
ஜோதி பாசு



பணத்தின்
ஆதிக்கம்
அமெரிக்காவுக்கு
நீ பணம்
வாங்கறது
ரொம்ப தப்பு!
தேர்தல்
நிதி
கல்வி

# ஜெய் பங்களா!

பங்களா தேசம் சுதந்திரம் பெற உதவினோம்; முன்னேற உதவி வருகிறோம். அதன் துக்கம் நமது துயர்; அதன் மகிழ்ச்சி நமது ஆனந்தம். அண்டை நாடுகள் இப்படித்தான் இருக்க வேண்டும்; இருந்து வருகிறோம்.

அண்மையில் அங்கு நடந்த படுகொலைகள் நமக்கு அதிர்ச்சி அளித்தன. நமக்கு மட்டுமல்ல, பங்களாதேச மக்களுக்கே அதிர்ச்சியாகத்தான் இருந்திருக்கும்.

அன்புமதம் இஸ்லாம்; இஸ்லாமிய நாடு பங்களாதேசம். எத்தனையோ பல புனித இஸ்லாமியத் தலங்களைத் தன்னகத்தே கொண்டது. ''அங்கேயா இப்படி?'' என்று வியந்து திகைத்தோம். சற்று யோசித்தால் தெளிவு பிறக்கிறது. வன்முறையும் வன்மமும் வன்முறையையே வளர்க்கின்றன. அன்புதான் அன்பை வளர்க்கும்.

பங்களாதேசம் சுதந்திரம் பெற்றபின் முஜிபுர் ரஹ்மானின் படுகொலையைத் தொடர்ந்து சராசரியில் ஓராண்டு விட்டு ஓராண்டு அங்கே சதிச் செயல்கள், ஆட்சி மாற்றங்கள்! இதையா, ''சுதந்திரம் பெற்று விட்டோம்'' என்று பத்தாண்டுகளுக்கு முன் ஆனந்தக் கூத்தாடிய பங்களா மக்கள் எதிர்பார்த்தார்கள்?

இந்தச் சதிச் செயல்கள், படுகொலைகள், ஆட்சி மாற்றங்கள் எல்லாம் அந்நாட்டின் துரிதமான முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை. ஒரு சிலரது பதவி ஆசைகள், சொந்த வன்மங்கள், பழி தீர்க்கும் படலங்கள் ஜியா உர் ரஹ்மான் போன்ற தலைவர்களது மரணத்துக்குக் காரணமாவது மட்டுமல்ல, மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதையும் பாதிக்கின்றன.

இதற்கெல்லாம் முடிவு? உண்டு! என்று ஜனநாயகம் வேர் ஊன்றுகிறதோ அன்று அராஜகம் தானாகவே உயிரை விடும். எனவே ஜனநாயகம் நிலைபெற, பங்களாதேச ஆட்சியும், ஆட்சிக்கு வெளியே உள்ள தலைவர்களும், மக்களும் தீவிரமாக முயல வேண்டும்.

இதில் இந்தியாவுக்கும் முக்கிய பங்கு உண்டு. அதனைச் சாணக்யத்துடன் சாதிக்க வேண்டும். ஜனநாயகம் அங்கு தோன்றித் தழைக்க நமது செல்வாக்கைப் பிரயோகிக்க வேண்டும். அதே சமயம் அந்தச் சிறு நாட்டை நாம் ஆட்டிப் படைக்க முயல்வது போல் தோன்றக் கூடாது! அதன் உள்நாட்டு விவகாரங்களில் நாம் தலையிடுவது போன்ற எண்ணம் ஏற்படக் கூடாது.

அத் தேசத்துக்குப் பொருளாதார உதவிகளையும் முன்னேறுவதற்கான நுண்ணறிவையும் நாம் கொடுத்து உதவ வேண்டும். அதே நேரத்தில் அதைக் காப்பாற்றிக் கரை சேர்ப்பதே நாம்தான் என்ற கர்வம் நமக்குக் கூடாது. அது அங்கே ஒரு தாழ்வு மனப்பான்மையைத் தோற்றுவித்து, உடன் விளைவாக விரோதத்தையும் உருவாக்கும்.

சாதுர்யமாக நடந்துகொண்டு அங்கே ஜனநாயகம் வலுப்பட வழி வகுப்பது நமது ஜனநாயகத்துக்கும்தான் நல்லது.

ஜியா உர் ரஹ்மானின் படுகொலை கண்டனத்துக்கு உரியதே என்றாலும் அவரது மரணத்திலும் ஒரு நன்மை முளை விட்டிருக்கிறது. இந்தியா — பங்களா தேச உறவில் அண்மைக் காலத்தில் தோன்றிய கசப்புணர்வுகள் குறைந்து, சுமுகமான சூழல் உருவாகியுள்ளது. நம் பிரதமர் உடனடியாக வருத்தம் தெரிவித்தது பங்களா தேசத்தில் மெச்சுதலுக்கு உள்ளாகியது. புதுதில்லி மிகுந்த புத்தி சாதுர்யத்துடன் நடந்து கொள்ளவேண்டிய தருணம் இது.

சதி செய்து ஆட்சியைக் கவிழ்த்துப் பதவிக்கு வந்த ஜியா உர் ரஹ்மான், தாமே சதிச் செயலுக்கும் படுகொலைக்கும் ஆளானார். அவர் கொலையுறக் காரணமாயிருந்த சதிக்கும்பலின் தலைவர் மன்ஜூர் பழி வாங்கப்பட்டுவிட்டார்.

இந்த ரத்தச் சேற்றிலிருந்து ஜனநாயக செந்தாமரை பிறக்கட்டும்; அத்தேச மக்களின் நல்வாழ்வாக அது மலர்ந்து மணம் பரப்பட்டும். எதிர் பார்ப்போடு வாழ்த்துகிறோம்: ஜெய் பங்களா!

1981 ஜூன் 14

துன்மதி வைகாசி 32

மலர்: 39 இதழ்: 46



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்



The method of Travelling in this country is in a kind of portable bed called Palanquin that is suspended on a bamboo and carried on men's shoulders.

- Major John Corneille

### 11

மண்டபத்தில் பசியால் சுருங்கிக்கிடக்கும் இரு சிறுமிகளைப் பார்த்ததும் சுவர்ணமுகியின் மனம் வெதும்பியது. இரக்கமுடன் அவள் கீழே குனிய,

"தொடாதீர்கள்" என்றான் ராஜர்.

சுவர்ணமுகி ஏன் என்பது போல் திரும்பினாள்.

"அவர்கள் இறந்து கொண்டிருக்கிறார்கள்" என்றான் ராஜர்.

சுவர்ணமுகி திடுக்கிட்டுக் கீழே நோக்கினாள்.

ராஜர் சொன்னது தவறு அல்ல.

சிறுமியின் நெஞ்சுக் குழியில் தக் தக் என்று அடித்துக் கொண்டிருந்த நாடி மெள்ள மெள்ள நொண்டியது. கடைசியில் அவர்கள் கண் முன்னாலேயே பக்கென்று அணைந்தது.

சீக்கிரத்தில் இரண்டாவது சிறுமியும் முன்னவளைப் பின்பற்றினாள்.

சுவர்ணமுகி முகத்தை மூடி மேலே நிமிர்ந்தாள். கை இடுக்குகள் வழியே கண்ணீர் மளமளவென்று வழிந்தது.

"இளவரசி" என்றான் ராஜர் தழுதழுப்பான குரலில்.

சுவர்ணமுகி விம்மலுடன் முகத்தைத் திறந்தாள். முகம் முழுதும் நீரால் பூசியிருந்தது.

"என்னால் தாங்க முடியவில்லை ராஜர்!" என்று கூறிய அவள் பரபரப்பாக அந்தத் தாய்ப் பெண்மணியின் முன் மண்டியிட்டாள்.

அந்த எலும்புக்கூடான உடம்புக்கு முகத்தைச் சுளிக்காது பணிவிடை செய்து, உடம்பைச் சுத்தப்படுத்தி, புதுத் துணி கொணரச் செய்து அதை அவள் மீது போர்த்திப் பழையவைகளைக் களைந்து, கடைசியில் எலுமிச்சையும் சர்க்கரையும் கலந்த சாறை அவள் வாயில் ஊட்டி மெள்ளத் திருப்தி காண முயன்றாள் சுவர்ணமுகி.

ராஜர் கருணையுடனும் அவநம்பிக்கையுடனும் அந்தக் காட்சியைப் பார்த்தான்.

வெறும் மண்டை ஓடாகத் தெரிந்த அந்தப் பெண்மணியின் முகத்தில்கூட ஒரு நன்றித் தனமுள்ள புன்னகையை அவன் பார்க்க நேர்ந்தது.

"போதும் இளவரசி! இனிமேல் உங்கள் வழக்கப்படி பிரார்த்தனை செய்ய முடியுமானால் செய்யுங்கள்!" என்றான்.

"ஏன்?" என்று கேட்டாள் சுவர்ணமுகி.

"இவளும் அதிக நேரம் வாழமாட்டாள். கண் விரிகிறது பாருங்கள்!" என்றான்.

சுவர்ணமுகியும் கைகூப்பிக் கண் மூடி இதய சுத்தியாய் வேங்கட மலையானைத் தோத்திரம் செய்ய,

அவர்கள் முன்னால் இருந்த கூண்டு வெறும் கட்டையாகிக் கொண்டிருந்தது.

சுவர்ணமுகி பின்னர் கண்களைத் திறந்து சிறிது நேரம் அந்தப் பெண்ணைப் பார்த்திருக்க,

அவள் கண்களையும் வாயையும் அகலமாக விரித்து மரணத்தின் கோரத்தை ஏற்றுக் கொண்டிருந்தாள்.

அவள் விஷயம் முடிந்ததும், சுவர்ணமுகி முன்னினும் அதிகமாகச் சோகித்து, கீழே நைந்துபோய் அமர்ந்தாள். புடவைத் தலைப்பால் முகத்தை மூட, சீக்கிரம் துணி முழுதும் ஈரமாகிவிட்டது.



வெகுநேரம் பாதிப் புலம்பலாக அவன் தேம்பினான். ராஜர் அவனை இரக்கத்தோடு பார்த்துக் கொண்டிருந்தான்.

பிறகு அவன் தெளிந்து மேலே நிமிர்ந்த போது, ''இளவரசி'' என்றான். ''இந்தியர்களின் துயரங்களுக்கு மட்டும் கண்ணீர் வடிப்பதென்றால் உலகத்தின் கண்ணீர் எல்லாம் பற்றாது.''

சுவர்ணமுகி திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள். கண்களில் ஈரம் மின்ன, ''ராஜர், இந்தத் துயரங்களுக்குக் காரணம் என்ன?'' என்று கேட்டாள்.

''பஞ்சம்!''

''அதை நீக்கமுடியாதா?'' என்றாள் தாபத்துடன்.

''வானம் பொழிய வேண்டும். அது கடவுளின் செய்கை என்று வைத்துவிடுவோம். இங்கே மனிதர்கள் கருணை பொழிய வேண்டும்.''

சுவர்ணமுகி மெள்ள எழுந்தாள்.

''ராஜர்! எங்களிடம் கருணை இல்லையா?'' என்று கேட்டாள்.

''நிறைய இருக்கிறது இளவரசி! தனித்தனி ஆட்களிடம் தனித் தனியாகத் தேங்கி இருக்கிறது. எல்லாமாகச் சேர்ந்து பிரவாகமாகப் பாய்ந்து செல்ல வழியில்லை.''

''ஏன் இல்லை?''

''உங்கள் ராஜாங்க முறை.''

''அதில் என்ன குறை?''

''உங்கள் மனிதர்கள் மிகவும் சுயநலக்காரர்களாக இருக்கிறார்கள். பட்டம் பதவிக்கு ரொம்பப் போட்டி போடுகிறார்கள். வீணாக ரத்தத்தை எங்கும் வழிய விடுகிறார்கள். சென்ற பதினைந்து ஆண்டுகளாக நாட்டில் அமைதியே இல்லை தெரியுமா?''

சுவர்ணமுகி தலை குனிந்தாள்.

ராஜர் சொன்னது அநேகமாகச் சரியாக இருந்தது.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு அவள் தந்தை ஸ்ரீரங்கன் கொல்லப்பட்டதிலிருந்து ஓயாத சண்டை. தீராத பகை.

அவளால் மேலே பேச முடியவில்லை.

"புறப்படுங்கள் இளவரசி!" என்றான் ராஜர்.

"இவர்களைஅடக்கம்செய்யவேண்டாமா?" என்றாள் சுவர்ணமுகி.

"நாம் பார்க்கும் உடல்களை எல்லாம் அடக்கம் செய்ய வேண்டுமானால் வேங்கிட கிரிக்கு இந்த யுகத்தில் போய்ச் சேர மாட்டோம்." என்றான் ராஜர்.

சுவர்ணமுகி திடுக்கிட்டாள்.

"ஆமாம் இளவரசி! வழியெல்லாம் உடல்களைப் பார்க்கப் போகிறீர்கள்! வயலிலும் சாலையிலும்! நூற்றுக் கணக்கானவர்! எண்ண முடியாது!" என்றான் ராஜர்.

சுவர்ணமுகி பல்லக்குப் பக்கம் வந்தாள். ஏறச் சென்றவள் சிறிது தயங்கினாள். தூரத்தில் மேகம் போல் ஒரு கறுப்பு மச்சம் தெரிந்தது. சிறிது நேரத்தில் அது இறக்கை முளைத்த கழுகுகளாக மாறுவது தெரிந்தது. கூட்டம் கூட்டமாக அவை வெவ்வேறு பிரதேசங்களில் நிழல் துண்டுகளாக இறங்கின.

ராஜரும் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டு அவள் பக்கத்தில் வந்து நின்றான்.

# திருத்தலம் கண்டேன்!



● நீங்கள் ஒரு திருத்தலத்தில்வசிக்கிறீர்களா? அல்லது அண்மையில் ஒரு புனிதத் தலத்துக்குச் சென்று வந்தீர்களா? அப்படியானால் அது பற்றி பக்தி மணமும், இலக்கிய ரசமும் வரலாற்றுச் சிறப்பும், நகைச்சுவையும் மிளிர கல்கியில் இரு பக்கங்களுக்கு மேற்படாத அளவில் எழுதுங்கள்.

எந்த மதத்தவரும் எழுதலாம். புகைப் படங்கள் அனுப்பலாம். பிரசுரமாகும் கட்டுரைகள், புகைப்படங்களுக்கு வழக்கமான சன்மானம் உண்டு. தவிர, ஆறு மாதங்கள் சென்ற பின் பிரசுரமான 26 கட்டுரைகளில், முதல் இரண்டாவது மூன்றாவது பரிசுக்குரியவை நடுவரால் தேர்ந்தெடுக்கப்படும். முதல் பரிசு ரூ. 250; இரண்டாம் பரிசு ரூ. 150; மூன்றாம் பரிசு ரூ. 100.

முதல் கட்டுரை ஆகஸ்டு முதல் வாரம் கல்கி ஆண்டுமலரில் பிரசுரமாகும்.

பிரசுரமாகாதவற்றைத் திருப்பிப் பெறப் போதிய தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கட்டுரையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. உறையின்மேல் "திருத்தலம் கண்டேன்" என்று குறிப்பிடவும்.

ஆசிரியர் கல்கி, சென்னை-600032

"எனக்கு ஓர் ஆசை இளவரசி!" என்றான் உற்சாகத் தொனியில்.

"என்ன?" என்றாள் சுவர்ணமுகி.

"நீங்கள் இந்த நாட்டுக்கு ராணிஆக வேண்டும். நான் உங்களுக்குத் தளபதி ஆக வேண்டும். இந்தநாட்டைத் திருத்திப் பெரிய சுபிட்ச நாடாக்க வேண்டும்" என்றான் மகிழ்ச்சி பீறிட.

சுவர்ணமுகி முகத்தில் மெல்லிய முறுவல் ஓடியது.

கண்களுக்குள் சின்னக் கனவு தோன்றி உடனே அழிந்தது.

அவனுக்குப் பதில் சொல்லாமல் பல்லக்கில் ஏறினாள். திரைகளை இறுக்க மூடினாள்.

யாத்திரை மீண்டும் புறப்பட்டது.

நகரி செல்லும் மார்க்கத்தில் உள்ள தரங்கிணிக் கோட்டைக்குள் அந்த லட்சுமி பூபாலன் மாளிகையில் நரசய்ய நாயகர் கொலுவிற்றிருந்தார்.

இரண்டு தேவதாசிகள் ஒரு அழகான தெலுங்குப் பாடலுக்கு அபிநயம் ஆடி, அவரைத் தாழ்வாக வணங்கிச் சென்றார்கள்.

ஒரு ஜரிகைத் தலைப்பாகைப் புலவர் விசேஷமாகக் கைகளையும் தலையையும் ஆட்டி, ஒரு தெலுங்குப் பத்தியம் பாடிவிட்டுச் சென்றார்.

அப்பால் ராயசமும் கணக்குப்பிள்ளையும் நிலவரங்களைக் கூறிவிட்டுப் போக, நரசய்யன் தமது மாளிகைக்குள் போவதற்கு எழுந்தார்.

"மகாராஜா சமூகத்தில் விண்ணப்பம்!" என்று குரல் கேட்டுத் திரும்பினார்.

ரத்னாவளி நிறைய வெற்றிலை போட்ட வாயுடன் உடம்பில் ஜொலிப்பான பட்டுப் புடவை மின்ன, தூலமான சரீரத்துடன் நின்றாள். விரல்களில் கணையாழி வைரங்கள் மின்னின. கழுத்தில்வடம் வடங்களாகத் தங்கச் சங்கிலிகளின் நெளிவுகள். கை முழுதும் கல் வைத்த பொன் வளையல்கள். இரண்டு புஜங்களிலும் நாகொத்து. இடுப்பில் பூமியைப் பிரதட்சிணம் பண்ணுவது போல் நீலங்கள் பதித்த ஒட்டியாணம். நெற்றியில் சுட்டி, மூக்கில் நத்து. காலில் தண்டை, கழுத்தில் அட்டிகை.

எல்லாமாகச் சேர்ந்து ஒரு ஆபரணக் குவியலுக்குள் அவள் இருந்தாள். அந்தப் பொன் அடர்த்திகளுக்குள் அவள் தேகத்தைத் தேடி எடுப்பதே கடினமாக இருந்தது.

நரசய்யன் மெல்ல நகைத்தார். நரை மீசை அவருக்கு அழகு.

"என்ன ரத்னாவளி! எங்கே போயிருந்தாய்? உன்னைப் பார்த்து என் சந்தோஷத்தைத் தெரிவிக்க நினைத்தேனே!" என்றான் நரசய்யன்.

அவர் முன்னால் நடந்து பெரிய தாமரை வடிவான சாளரத்தை நோக்கிச் செல்ல, பின்னால் ரத்னாவளி நர்த்தன நடையில் சென்றாள்.

ஊரில் உள்ள பிரதான தேவதாசி அவள்.

அவளைப் பார்க்கும்போது ஒரு நட்சத்திரக் கூட்டம் நகர்ந்து போவது போல் இருந்தது.

நரசய்யன் அங்கே சாளரப் பக்கத்து திண்டு ஒன்றில் அமர,

ரத்னாவளி கைகளைக் கோத்து, அவர் முன்னால் விநயத்தின்பிரதிபிம்பமாக நின்றாள்.

# ஸ்ரீராமஜெயம்

## போட்டி முடிவு



அஞ்சலட்டையில் அதிகபட்சம் எத்தனை ஸ்ரீராமஜெயம் எழுத முடியும் என்று கேட்டு வைத்த போட்டியில் கலந்துகொண்ட அனைவருக்கும் நன்றி. பரிசு கிடைக்காது போனாலும் லோக க்ஷேமத்துக்கு உதவினோம் என்ற திருப்தி அனைவருக்கும் இருக்கும்.

10,001 தடவை எழுதியிருப்பதாக ஒருவர் குறிப்பிட்டிருந்தார். ஆனால் இவர் கூட்டலில் தவறு செய்துள்ளார். வரிசைக்கு 109 முதல்118 வரைமொத்தம் 10 வரிசை. கூட்டினால் 1101தான் வருகிறது. இதே போல் 14501 தடவை என்றும் 8268 தடவை என்றும் எழுதியவர்களும் கூட்டலில் தவறு செய்துள்ளார்கள். அடுத்து 7315 தடவை என்றும் 7127 தடவை என்றும் எழுதியுள்ளஇருவரும் உண்மையிலேயே அரும்பாடுபட்டு எழுதியிருக்கிறார்கள். லென்ஸ் வைத்து இந்தப் பொடி எழுத்துக்களைப் பெரிது பண்ணிப் பார்த்துத் திருப்தி அடைந்தோம். இந்த இருவருக்கும் பரிசுத் தொகையான ரூ. 500 சமமாகப் பிரித்து தலா ரூ. 250 வழங்குகிறோம்.

பரிசு பெறுகிறவர்கள்:

1. **ஆர். பசுபதி**
   1-138, ஜி. ஐ. முதல் நகர்,
   மல்லன்கிணறு சாலை,
   விருதுநகர் 626002.

2. **கா. சுப்பிரமணியன்**
   த.பெ. B. காளி, சப் சட்டு
   பி. பிளாக், ஜுபிலியல் காலனி,
   ஏற்காடு ரோடு, சேலம்-8.

---

''ஜெயித்து விட்டோம் ரத்தினா! உன் போன்றோர் உதவியாலே!'' என்றான் நரசய்யன்.

''சுவாமி! இந்த அடிமை உதவி செய்தாள் என்று சொல்ல அடுக்குமோ? தாங்கள் தந்த பிச்சையில் பிழைப்பவள் அடியாள் ஆயிற்றே! ஆக, தாங்கள் கொடுத்த சொத்தைத்தானே தாங்களேசெலவழிக்கிறீர்கள்!'' என்று சாதுரியமாகப் பேசினாள் ரத்தினாவளி.

''அதில்லை ரத்தினா! நீ கொடுத்த மூவாயிரம் படை மிகவும் உதவிற்று. ஒரு நேரத்தில் அது இல்லாவிட்டால் நிச்சயம் நாங்கள் தோத்திருப்போம். மொத்தம் 198 பேர் அதில் உயிரை இழந்தார்கள். தெரியுமோ?'' என்றார் நரசய்யா.

''இந்த அடிமை அறிவேன். தாங்கள் சொன்னது தவிர இருபத்தொரு குதிரைகளும் போய்விட்டன. எல்லாவற்றையும் சீக்கிரம் சரிக்கட்டி விடுவேன்'' என்றாள் ரத்னாவளி.

தேவதாசிகள் அந்த நாளில் செல்வாக்கு வாய்ந்தவர்கள். அவர்கள் வருமானங்களுக்கு எந்த விதத் தடைகளும் இல்லை. வரி போன்ற சுமைகளும் இல்லை.

அவர்களை அரசர்கள் ஒரு முக்கியஸ்தர் போலவே நடத்தினார்கள். தேவதாசிகள் பலருக்கு ஏராளமாகச் சொத்துக்கள் உரிமையாக இருந்தன. மான்யங்களும் ஏராளமாக இருந்தன. ஒரு சீமைக்கு அதிபதி போல் வாழ்ந்த அவர்கள் தங்களிடம் சொந்தப் படை ஒன்றை வைத்திருக்க வேண்டும் என்று ராஜாங்கம் எதிர்பார்த்தது. இந்தப் படைகளுக்கான செலவு முழுவதையும் குறிப்பிட்ட தேவதாசிதான் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அரசர் யுத்தத்துக்குப் போகும்போதெல்லாம் இந்தப் படைகளை அவர்கள் அரசருக்குக் கொடுத்து உதவ வேண்டும்.

இங்கே ரத்தினாவளி தனது மூவாயிரம் படையை நரசய்யாவுக்குக் கொடுத்து உதவியிருந்தாள்.

''நல்லது ரத்தினாவளி! உனக்குத் தக்க சமயத்தில் நான் கைம்மாறு செய்வேன். இப்போது ஏதாவது விஷயம் உண்டா?'' என்றார் நரசய்யா.

''இருக்கட்டும் இருக்கட்டும். சுவாமியோட தயவு இருந்தால் போதும். இப்போ அடியாள் சுவாமிக்கு இன்னொரு மகா அதிர்ஷ்டத்தை அழைத்து வந்திருக்கிறாள்'' என்று கூறினாள்.

''என்னது?'' என்றார் நரசய்யா.

''பெரிய அதிர்ஷ்டம். இதோ வரவழைக்கிறேன்'' என்று கூறி, கூடத்தை நோக்கிக் கைதட்டினாள் அவள்.

உள்ளே மிடுக்காக நுழைந்து வந்தது யார்?

நரசய்யா ஒன்றும் புரியாமல் இருக்க, ரத்தினாவளி முறுவல் பிரகாரங்களை நாலா திசைகளிலும் ஓடவிட்டுக் கொண்டிருந்தாள்.

(தொடரும்)

---



அம்மா: ''புருஷனிடம் கோவிச்சுக்கிட்டுத் திடீர்னு வந்து நிற்கிறியே... என்னடி சண்டை உங்களுக்குள்?''

மகள்: ''காட்டுமிராண்டித்தனமான கட்டுப்பாடு களெல்லாம் விதிக்கிறாரம்மா... மாதம் முப்பது சினிமாவுக்கு மேல் போகக் கூடாதாம் நான்!''

உ. ராஜாஜி



# வட்டமேஜை

● தில்லு முல்லு தலையங்கம் பார்த்தேன். கசாப்புக் கடையில் கருணையைத் தேடுகிறீர்கள். 'ஊழல் மகா சக்கரவர்த்தியின் தீவு தமிழகம்' என்று கலைஞரை வர்ணித்த இந்திரா, 'இரத்தக் காட்டேரி' என்று இந்திராவை வர்ணித்த கலைஞர் இந்த இருவரும் இன்று கூட்டுச் சேர்ந்து குலாவுவது ஏன் என்று மக்களுக்குப் புரியும்! இந்தக் கேடு கெட்ட சர்வாதிகார ஆட்சி அழியும். விடியும்வரை காத்திருப்போம்.

சிதம்பரம் — சிவ. ராஜகுமார்

● நரசிம்மன் சொல்கிறார், மதம் மாறுவதைச் சட்டம் போட்டுத் தடுக்க வேண்டுமாம்! ஏன், ஹரிஜனங்கள் நம் கூலிகளாக, அக்ரஹார வீதிகளில் நடக்கக் கூடாத நீசர்களாக, நம் வயலில் என்றென்றும் வேலை செய்யும் அடிமைகளாக, எல்லோருக்கும் வேலை செய்யும் குப்பை பெருக்குபவர்களாக, சாக்கடைத் துப்புரவுத் தொழிலாளர்களாகக் கிராமத்தில் குப்பத்தைத் தவிர மையத்துக்கு வரக்கூடாத குடிமகனாக என்றென்றும் இருக்க வேண்டுமா?

சென்னை-78 — ஆர். அம்பிகாபதி

● வெளி நாடுகளிலிருந்து ஹிந்துக்களை மதம் மாற்ற வேண்டும் என்பதற்காகவே வரும் தொகைகளை அரசாங்கம் தடை செய்யவேண்டும். பல நாடுகளில் மதம் மாறுதலைச் சட்டம் கொண்டு தடுக்கிறார்கள். எனவே இந்தியாவும் அதைப் பின்பற்ற வேண்டும். இல்லாதவரை ஹிந்து மதத்தைக் காப்பாற்ற முடியாது.

விஜயவாடா — கா. சுப்பிரமணியன்

● ஒரு சராசரி மனிதனின் அபார வெற்றியைப் பற்றி கோமதி ஸ்வாமிநாதன் தொகுத்தளித்துள்ள விவரங்கள் என்னை வியக்கவைத்தன. டைஜஸ்டில் வெளிவரும் சுவையான கட்டுரைகளைப் போல் இதுவும் சுருக்கமாக இருந்தது. பாராட்டுக்கள்.

பெங்களூர்-5 — அ. குமார்

● நடிக்க வந்துவிட்டபின்னர் இரசிகர்களின் தொல்லை தாங்க முடியவில்லை என்று வீண் ஜம்பம் அடித்துக்கொள்ளும் நடிகைகளுக்கு மத்தியில் ''அவர்கள் இல்லாவிட்டால் நான் எங்கே?'' என்று மனோரமா கூறியிருப்பது அவருடையரசிகர்களாகிய எங்களுக்குப் பெருமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது.

இணைத்துக்கடவு — ராஜமாணிக்கம்

● கண்களில் குளம். இதயத்தில் வேதனை. வேலையில் சில மணி ஈடுபாடின்மை. இளங்கோவின் நிலைக்காக வருத்தம். கதை பற்றி சிறிது சிந்தனை – இவ்வளவும் பட்டுக்கோட்டை பிரபாகரனின் 'ஒரு ரசிகனின் ரசிகை' என்னில் விளைத்திட்ட பாதிப்புக்கள்!

கோவை-12 — துரை பால்ராஜ்

● தோ பென்னட் எழுதிய சிறுகதையின் கருத்து, நடையின் வேகம், முடிவின் ஆழம் எல்லாம் என்னை மிகவும் கவர்ந்தன.

திம்மராஜபுரம் — என். ராமகிருஷ்ணன்

● எனது குடவாயில் கோட்டம் நாடக அரங்கேற்றத்தன்று அமைச்சர் வீரப்பன் முன்னால் நான் கண் கலங்கிப் பேசியதாகத் தகவல் வந்திருக்கிறது. எதற்காக நான் கண்கலங்க வேண்டும்? உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு என்னை அழைக்காதது அதன் நஷ்டம். அதற்காக நான் ஏன் கண்ணீர் சிந்த வேண்டும்? கண்ணீர் சிந்தவில்லை; வெந்நீரை வாரியிறைத்தேன். என் கண்கள் குளமாகி யாரும் கண்டதில்லை.

சென்னை — கோவி மணிசேகரன்

● இந்த வாரம் கண்ணதாசனின் மனவாசம் சிந்திக்கும் (?) பகுத்தறிவாளர்களில் சிலருக்காவது மனமாற்றம் தருமா?

தஞ்சை — காந்தி ஆசிரமம் கிருஷ்ணன்

● ராமன் படத்தையும் கிருஷ்ணன் படத்தையும் பெரியார் ஈ. வே. ரா. செருப்பால் அடித்தது, கண்ணதாசன் குறிப்பிட்டுள்ளது போல அவர்களைப் பிடிக்காததினால் அல்ல. அவர்களுக்கு எந்தச் சக்தியும் கிடையாது என்பதை நிரூபிப்பதற்காகத்தான்!

''பத்தாயிரம் ஆண்டு காலமாகப் பல்லாயிரம் கோவில்களைச் சமைத்தவன் எல்லாம் மடையன்; நேற்று முளைத்த காளான்கள் தான் புத்திசாலிகளா?'' என்கிறார் கண்ணதாசன். பல்லாயிரம் ஆண்டுகளாக மனிதன் பூமி உருண்டை என்று அறியாமலிருந்தானே பூமி சுற்றுவதை அறியவில்லையே, ஏன்?

சென்னை-61 — வி.ஜி. நேசன்.

● ஓவியர் மாருதியும் வர்ணமும் பிற்காலத் தோற்றங்களைப் புகைப்படத்தைப் பார்த்துச் சவால் விட்டு வரைந்திருக்கிறார்கள். இருவரும் எங்களை அசத்திவிட்டார்கள்.

பட்டுக்கோட்டை — டி. ரவிசந்திரன்

● குமாரி ஜெயலலிதா அவர்களின் கடிதம் பார்த்தேன். நான் சில தவறுன செய்திகளை வெளியிட்டிருப்பதாகக் கூறிவிட்டு, 'இந்த இடத்தில்தான் பிரபுசங்கர் குறிப்பிட்டபடி நடந்தது' என்றும் எழுதியிருக்கிறார். ஆக, ஒரு பார்வையாளன் என்ற முறையில் நான் எழுதியவை சரியே என்று மறைமுகமாக ஒப்புக்கொண்ட ஜெயலலிதாவுக்கு நன்றி.

சென்னை-11 — பிரபுசங்கர்

# "காம்ப்ளான்® ஒண்ணுதான் சரி என் குடும்பத்துக்கு ...திட்டமிட்ட பரிபூரண உணவு."



"பல வேளைகள் சாப்பிடத் தவறி விடும் என் கணவருக்கு"



"சாப்பிடும்போது சண்டித்தனம் செய்யும் என் மகனுக்கு"



"நோயுடன் தேறிவரும் என் தாயாருக்கு"

## காம்ப்ளான்® ஒன்றுதான் எவருக்கும் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களால் முழுமை பெற்றது.




"அசதியினால் சரிவர சாப்பிட முடியாத எனக்கு"

காம்ப்ளான் ஒன்றுதான் திட்டமிட்ட விஞ்ஞானக் கலவையாக உடலுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களை அளிக்கிறது: புரதங்கள், கார்போஹைட்ரேட், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், உலோக தாதுக்கள். எனவேதான், டாக்டர்கள் பெரும்பாலும் சிபாரிசு செய்யும் ஆரோக்கிய பானமாக விளங்குகிறது காம்ப்ளான்.

கிடைப்பவை நால்வகை: இன்சுவை ரகங்களாக—சாக்லேட் காம்ப்ளான், ஏலக்காய்-குங்குமப்பூ காம்ப்ளான், "ஸ்ட்ராபெர்ரி காம்ப்ளான், தவிர சாதா காம்ப்ளான்."

## திட்டமிட்ட பரிபூரண உணவு

# காம்ப்ளான்®

லின்டாஸ்.GLC. 10-2015 TM




## 28. இதுதான் ஜாதகம்

அந்தநேரம் தமிழகத்தைத் துயர் சூழ்ந்த நேரம். காங்கிரஸ் பிளவு வெடிப்பதற்கு முன்னாலேயே அந்தத் துயரம் நிகழ்ந்துவிட்டது.

அறிஞர் அண்ணா அவர்கள் அவனை அழைத்து வரச் சொல்லி அவன் மறுத்து விட்ட பிறகு, அவனே வெகுநேரம் உட்கார்ந்து யோசித்தான்.

"நம்மிடத்தில் எவ்வளவோ பிரியம் காட்டியவர், நாமும் அந்த அளவுக்கு அன்பு காட்டி வந்தோம். காரணம் எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும். உடல் நலிவுற்ற நேரத்தில் அழைக்கிறார். போய்ப் பாராமலிருப்பது ஆத்ம துரோகமாகும்" என்று வெகு நேரம் யோசித்த பிறகு, டெலிபோனை எடுத்தான்.

அன்றைய முதலமைச்சர் அண்ணா அவர்களுக்கு டெலிபோன் செய்தான். அன்று இரவே வந்து பார்ப்பதாகக் கூறினான்.

டெலிபோனில் அந்தச் செய்தியைக் கேட்டுக்கொண்ட அண்ணாவின் உதவியாளர் திரு கஜேந்திரன் அண்ணாவிடம் இந்தச் செய்தியைச் சொல்லி விட்டார்.

இரவு அவனும் ஆர். எஸ். பாண்டியனும் மற்றும் இரண்டு நண்பர்களும் நுங்கம்பாக்கத்தில் உள்ள அண்ணாவின் இல்லத்திற்குச் சென்றார்கள்.

அவன் வருவான் என்றே ஒரே ஒரு போலீஸ்காரரைக் கூட வைக்காமல் அண்ணா அனுப்பி விட்டார்.

அவன் சென்றபோது அண்ணா அவர்கள் ஒரே ஒரு முட்டையின் வெள்ளைக் கருவைச் சாப்பிடுவதற்கே சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். விக்கல் மேல் விக்கல் வந்துகொண்டிருந்தது.

அதோடு அவனைப் பார்த்து, "எப்படி இருக்கிறாய்? குழந்தைகள் எல்லாம் சுகமா?" என்று கேட்டார்.

"எல்லாரும் நலம். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டான் அவன்.

"இன்னும் சரியாக 'செட்-அப்' ஆகவில்லை" என்று விக்கலோடு சொன்னார் அவர்.

ஒரு அரை மணி நேரம் அவர் எதிரிலேயே உட்கார்ந்திருந்தான் அவன்.

அவரால் பேச முடியவில்லை. உட்கார்ந்திருக்கும்போதே திரு அரங்கண்ணல் வந்து அண்ணாவிடம் ஏதோ சொல்ல முயன்றார்.

அண்ணா அவரைப் பார்த்ததும் கடுமையான முகத்தோடு "போ போ!" என்றார்

கொஞ்ச நேரம் கழித்ததும் அவனைப் பார்த்து, "இன்னும் சரியாகவில்லை. நாளை மாலை வருகிறாயா?" என்றார்.

"சரி அண்ணா" என்றபடி எழுந்தான் அவன்.

இல்லத்திற்கு வந்ததும் தனது 'கடிதம்' பத்திரிகையில், "இறைவா, அண்ணாவைக் காப்பாற்று" என்றொரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தில் "விக்கல் வந்த உயிர் சிக்கல் நிறைந்தது; அண்ணாவைக் காப்பாற்றக் கூடிய தகுதியை டாக்டர்கள் இழந்து விட்டார்கள். இறைவன்தான் இனி அவரைக் காப்பாற்ற வேண்டும்" என்று குறிப்பிட்டிருந்தான்.

மறுநாள் மாலையிலேயே அண்ணா அடையாறு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருப்பதாகச் செய்தி வந்திருந்தது.

என்றும் நோய் நொடிகளைப் பாராத அண்ணாவை அந்தக் கொடிய நோய் வெகுவாகத் துன்புறுத்தி விட்டது. அதுவரை அவர் மாத்திரை சாப்பிட்டதில்லை; ஒரு ஊசிகூடப் போட்டுக் கொண்டதில்லை. அமெரிக்க ஆபரேஷன் பலன் கொடுத்ததாகவும் தெரியவில்லை.

அந்த நோய்க்கு மரணம்தான் முடிவு என்றால், உடம்பை அறுத்துச் சித்ரவதை செய்யாமல் பூப்போல அவரைக் கவனித்து வழியனுப்பி இருக்கலாம்.

நோயின் உபாதைகளை மேலும் அதிகப்படுத்தும் மருத்துவங்களே இந்நாட்டில் நிறைந்திருக்கின்றன.

அடையாறு ஆஸ்பத்திரி என்ன ஆண்டவனின் திருக்கோயிலா? அது ஆறுதலுக்கு ஓர் இடமே தவிர, ஆவியைக் காக்க அல்ல.

அண்ணா மரணத்தை நெருங்குகிறார் என்பது அவனுக்குத் திடமாகத் தெரிந்தது. அவனைவிட வேறு ஒருவருக்கு அது மிக உறுதியாகத் தெரிந்தது.

அவருக்கு டெலிபோன் செய்து, "என்ன இப்படி விட்டு விட்டீர்கள்" என்று கேட்டான் அவன்.

"என்ன செய்வது? யார் சொன்னாலும் அவர் ஏற்றுக்கொள்வதில்லை" என்று பதில் சொன்னார் அவர்.

ஆதீனகர்த்தா நோய்வாய்ப்பட்டு விட்டால் அடுத்த வாரிசு எமனுக்குத் தேங்காய் உடைக்குமாமே!...

அண்ணாவின் மரணத்தைச் சிலர் ஆவலோடு எதிர்பார்த்தார்கள் என்பதில் அவனுக்குச் சந்தேகமில்லை.

அடையாறு ஆஸ்பத்திரிக்குத் தமிழகத்திலுள்ள தி.மு.க. பிரமுகர்கள் வந்த வண்ணம் இருந்தனர்.

அண்ணாவின் தலைமாட்டிலேயே ஆள்சேர்க்கும் படலம் நடந்தது.

இன்று மற்றொரு கட்சியில் இருக்கும் சில பிரமுகர்கள் கூட இந்த முயற்சியில் ஈடுபட்டார்கள்.

கட்சியில் நம்பர் ஒன்று அண்ணா; இரண்டு நெடுஞ்செழியன் என்றுதானே தலைவர் வரிசை இருந்தது! அண்ணா மரணமடைந்து விட்டால் அதை முறியடிப்பதெனத் தீவிர முயற்சிகள் நடந்தன.

நாவலருக்கு அது தெரியுமோ தெரியாதோ, அவனுக்கு அது தெளிவாகத் தெரிந்தது. கழகத்தில் சில மனிதர்களுடைய ஜாதகமே அவனுக்குத்தானே புரியும். அண்ணாவுக்கே அது புரிந்திருந்தது. அவர் யாரும் தம்மைப் பார்க்காமலிருப்பதையே விரும்பினார்.

தமக்கு வந்துள்ள நோய்க்காகக் கடவுளுக்கு நன்றி செலுத்துபவர் பலர், கட்சியிலேயே இருக்கிறார்கள் என்பது அவருக்குத் தெரியாதா? ஆனால் உண்மையிலேயே ரத்தக் கண்ணீர் வடித்தவர்கள் பலர்.

கள்ளங் கபடமற்ற தி.மு.க. தொண்டர்களுக்கு 'அண்ணா இறந்துவிட்டால் கட்சி என்ன ஆகுமோ' என்ற பீதி இருந்தது. உள்ளூற அதை நினைந்து நினைந்து தூக்கமில்லாமல் தவித்தவர்களைக்கூட அவன் அறிவான்.

இந்த நிலையில் அமெரிக்காவில் இருந்து மீண்டும் வந்திருந்தார் அண்ணாவுக்கு ஆபரேஷன் செய்த டாக்டர் 'மில்லர்' என்பவர். அவரிடம், நோய், மீண்டும் வளர்ந்திருப்பதாகக் கூறப்பட்டது.



''இருக்கவே முடியாதே நான் கத்தி வைத்துவிட்டால் அது மீண்டும் வளரவே வளராதே'' என்று சாதித்தார் அவர்.

மறுபடியும் அறுத்துப் பார்க்க வேண்டும் என்று அவர் கோரினார். அண்ணாவிடம் அதைத் தெரிவித்தபோது அவர் ஒருவித விரக்திச் சிரிப்புச் சிரித்தார்.

ஏற்கனவே ஆள் கண்டு விரல் அளவு ஆகிவிட்டார். மீண்டும் ஒரு அறுவையா?

ஒரு நல்ல உள்ளத்துக்கு எவ்வளவு சித்ரவதை? கடவுள் நம்பிக்கையின் மீதும் யோக்கியனாக இருப்பது பற்றியும் இங்கேதான் சந்தேகம் வருகிறது.

கள்வர்கள், கயவர்கள், காமுகர்கள், சண்டாளர்கள், சதிகாரர்கள் எல்லாம் ஆரவாரமாகவும், ஆரோக்கியமாகவும் வாழ விட்டுவிட்டு, அப்பாவிகளின் மீது நோயைத் திணிப்பதுதான் ஆண்டவனின் வேலையா?

ஆத்திகன் மயங்குவதும், நாத்திகன் முழங்குவதும் இந்தக் கேள்வியிலேதான்!

அண்ணாவின் துயரம் நீண்டது போல இந்த விதிகளும் நீள வேண்டாம்!

அண்ணா இறந்துவிட்டார் என்ற செய்தியைக் கேட்டதும் ஓவென்று பேரிரைச்சல் அவன் காதுகளில் கேட்டது.

அவ்வளவு பெரிய கூட்டம் ஒன்று அழுது துடித்தது.

அதுவரை யாருக்கும் வந்திராத பெருங் கூட்டம், அவரது இறுதி யாத்திரைக்கு வந்தது. (படம்: அதில் ஒரு பகுதியே)

சரியாகவோ தவறாகவோ அவன் தனது 'தென்றல்' பத்திரிகையில் 'அண்ணாவின் பெரும் பயணம்' என்றொரு காவியத்தை எழுதினான். அந்தத் தலைப்பினுடைய அர்த்தம் நீண்ட காலத்துக்குப் பிறகுதான் அவனுக்கே புரிந்தது.

---



▲ ''என்னிடமா உன் சவால் ஆச்சரியக் குறி. நீ என்ன பெரிய கொம்பனோ கேள்விக்குறி. உள்ளே வா ஹைபன். பல்லை உடைக்கிறேன் ஃபுல் ஸ்டாப்'' என்று அங்கே சண்டை போடுகிறாரே. யார் அவர்?

▲ ஜோதி அச்சகத்தின் புரூஃப் ரீடர்!

-கே. வி. கோபால்

அண்ணு வங்கக் கடற்கரையில் அமைதி யடைந்து விட்டார். இனி எந்த டாக்டர் அவரைக் கொடுமைப்படுத்த முடியும்?

அதன் பிறகு நடந்ததுதான் மாமூலான சரித்திரம். அண்ணனைக் கொன்று தம்பி பட்டத்திற்கு வருவது. அப்பனைக் கொன்று மகன் அரசாள்வது — இந்த நவாபுகளின் கதைக்கு இரண்டாம் பாகம் தி.மு.க.வில் நடந்தது!

தெரிந்தோ தெரியாமலோ திரு எம். ஜி. ஆர். அவர்களும் கருணாநிதியை ஆதரித்து விட்டார்.

எம். ஜி. ஆர். ஆதரிக்கிறார் என்றவுடனேயே கருணாநிதியை ஆதரிப்பவர்கள் அதிக மாகிவிட்டார்கள்.

நெடுஞ்செழியனைப் புறக்கணித்து விட்டு கருணாநிதியைப் பதவியில் அமர்த்துவது, அதனால் சுலபமாகி விட்டது.

அப்போதெல்லாம் திரு கருணாநிதி காலே யிலும் மாலையிலும் எம். ஜி. ஆரைப் பார்த்த வண்ணமிருந்தார்.

கட்சியின் எம். எல். ஏக்களின் கூட்டம் கூடியது. கருணாநிதி கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நாவலரும், மாதவனும் அண்ணாவின் சமாதியில் கண்ணீரோடு முறையிட்டுக் கொண்டார்கள்.

சமாதியின் ஈரம் காய்வதற்கு முன் பாகவே கட்சி இரண்டு படும் போலத் தோன்றிற்று. ஆனால் கருணாநிதி தம்முடைய சாகஸங்களினால் அன்று அதைக் காப்பாற்றி விட்டார்.

அப்போது கருணாநிதியின் ஜாதகம் மிக நன்றாக இருந்திருக்க வேண்டும். கருணாநிதி முதலமைச்சரான பிறகுதான் காங்கிரசுக்குள் பிளவு ஏற்படத் தொடங்கிற்று.

அவரது முதலமைச்சர் பதவி உறுதி யான பிறகு காங்கிரஸ் பிளவு வெடித்தது.

அந்த நேரத்தில்தான் அவன் இந்திராவை ஆதரிப்பதில் உறுதியாக இருந்தான்.

தான் நாலணு உறுப்பினர் பதவியில் இருந்து நீக்கப்பட்டதும், தான் முன்பு கோரியிருந்த கோரிக்கைக் கூட்டத்தை (Requisition meeting) இந்திரா கூட்ட முயன்றார்.

அ. இ. கா. க. உறுப்பினர்கள் யார் எங்கே இருக்கிறார்கள் என்பதைக் கண்டு பிடிக்கும் பலப் பரீட்சை நடந்தது. அந்தப் பலம் ஓரளவுக்குச் சமமாகவே காட்சியளித்தது.

அவனும் இந்திராவை ஆதரித்துக் கையெழுத்துப் போட்டான் என்பதை திரு சி. எஸ். நம்பவே யில்லை.

'ஒருவேளை இதுவும் காமராஜரின் தந்திரமோ' என்றுதான் பலபேர் கருதினர்கள்.

ஆள்வார்பேட்டையில் இருந்த திரு பூவராகன் வீட்டில் இந்திரா காங்கிரசின் தற்காலிக அலுவலகம் தோன்றிற்று. அங்கே இருந்த திரு சி. எஸ். அவர்களும், கே.டி. கோசல்ராமும் அவனை அழைத்து, ''எப்படியாவது சேலம் எம். பி. சுப்பிரமணியத்தை மட்டும் நம்மோடு கொண்டு வந்து விடவேண்டும்'' என்று கோரினர்கள்.

அவனும், கோசல்ராமும், பூவராகனும் சேலத்துக்குக் காரில் புறப்பட்டுச் சென்றார்கள். பூவராகனின் மாமனர் வீட்டில் தங்கினர்கள்.

''ஒரு விஷயம் பேச வேண்டும். துவாரகா ஹோட்டலுக்கு வாருங்கள்'' என்று எம்.பி. சுப்பிரமணியத்தை அவன் வேண்டி அழைத்தான். (வளரும்)

---



அருள்வாக்கு

## பிறப்பு இல்லை! இறப்பு இல்லை!

பிறப்பு - இறப்பு இரண்டும் நமக்கு இருப்பது நன்றாகத் தெரிகிறது. பிறப்பு - இறப்பு இந்த இரண்டுக்கும் காரணம் என்ன? பிறப்புக்குக்காரணம் காமம். இறப்புக்குக்காரணம் காலன்.

காமம் என்பது இல்லாமற்போனால் உற்பத்தி என்பதே கிடையாது. காலம் என்பது இல்லாவிட்டால் அழிவே கிடையாது. ஆகவே நாம் காமம், காலன் இரண்டையும் வென்றாக வேண்டும். அதற்காக நாம் போய்ச் சரணடைகிற ஈசுவரன் எப்படி இருக்கிறான்?

காமனைக் கண்ணால் எரித்தவராம்
காலனைக் காலால் உதைத்தவராம்!

தன் கண்ணாலேயே காமனை எரித்தவன், காமனையே எரித்து விட்டால் உற்பத்தியில்லை. காலாலே காலனைச் சங்காரம் பண்ணினார். ஆகையால் பரமேசுவரனிடத்தில் போனால் நமக்குப் பிறப்பு இல்லை; இறப்பு இல்லை.

—காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

# சினிமா சினிமா!



''சார்! ''ஒரு வினாடி சுகம்''ன்னு என்னு சார்?''

''இந்தா! உன்னோட அழகான பிராகரஸ் ரிப்போர்ட்டை உங்க அப்பாகிட்ட காமிச்சுக் கேளு!''

— ஆர். பார்த்தசாரதி

●



ஒருவன் : ''உனக்குப் படு சுட்டியா இரட்டை குழந்தைங்க பிறந்திருக்காமே.. என்ன பேர் வைக்கப் போறீங்க.''

மற்றவன் : ''தில்லு — முல்லு''

— எஸ். ராஜன்

●

''ராமு, சமீபத்திலே என்ன சினிமா பார்த்தே?''

''ஒருத்தி மட்டும் கரையினிலே பார்த்தேன்''

''படம் எப்படி?''

''ரொம்பப் பயமா இருந்தது''

''ஏன் மர்மப் படமா?''

''அதெல்லாமில்லே. நான் ஒருத்தன் மட்டும்தான் தியேட்டரினிலே''

— வி. ந. ஸ்ரீதரன்

●



**பாலைவனச்சோலை :**

அரிசி 'க்யூ'
சர்க்கரை 'க்யூ'
மண்ணெண்ணெய் 'க்யூ'
என நின்று சோர்ந்த பின்னே
அக்கறையாய் நின்றேன் சினிமா க்யூவில்

— எல். ஜி. சங்கர்

●




பாக்கியராஜின் புதிய படங்கள் இரண்டுமே ரேஷன் க்யூவில் நிற்பவர்களுக்கு ஆறுதல் கூறுவது போல் இருக்கிறது.

இன்று போய் நாளை வா,
விடியும்வரை காத்திரு

— எல். ஜி. சங்கர்

●



''இரயில் பயணங்களில்'' படத்துக்கு எப்படிடா போனே?''

''டிக்கெட் வாங்காமத்தான்!''

— மு. பஹீருதீன்

●

நண்பன் : ''ராஜ பார்வையை டைரக்டர் சசி டைரக்ட் பண்ணியிருந்தா என்ன ஆயிருக்கும் தெரியுமா?''

ரசிகன் : ''என்ன ஆயிருக்கும்! வசூல்ல ரிக்கார்டு ஏற்பட்டிருக்குமா?''

நண்பன் : ஊஹூம்! மாதவி குளிக்கிறதை நல்லா பார்த்திருக்கலாம்!''

— ந. திருவாழி



# குளத்தில் விழுந்த கல்

சுபா

தொண்டை கமறிற்று. துக்கத்தில் குடமாய்க் கொப்பளிக்கிற கண்ணீரை அடக்கிப் பார்த்ததில், மூச்சுக் குழாயே அடைபட்டுப் போன மாதிரி மார்பு முட்டிற்று. வெயிலில் வாட்டிய மாதிரி நா உலர்ந்து போயிற்று. துணியைப் புதைத்து மூடின வாயில் கேவல்கள் செத்துப் பிறந்து செத்தன. வாய் விட்டு அழ முடியாது. அழக்கூடாது. உடனே ஏராளமாய்த்தலைகள் வட்டமிட்டு என்ன என்ன என்று துளைத்து விடும்.

படபடவென்று கதவு தட்டப்பட்டது.

''என்னடி பண்ணறே சீக்கிரம் வா... அவங்கள்லாம் வர நேரமாயிடுச்சி...''

அருணாவுக்கு உதடுகள் துடித்தன. வந்து விடுவார்கள். வந்து விடுவார்கள்... இதே பேச்சு... வரட்டுமே... யார் வேண்டாம் என்றார்கள்? அவர்கள் வருகிறதனால் இயல்பை எல்லாம் மாற்றிக் கொண்டு அழகாக அலங்கரித்துக் கொண்டு, இல்லாத பணிவைத் தேடிக்கொண்டு, பொங்காத நாணத்தைப் போர்த்திக் கொண்டு போய் நிற்க வேண்டுமோ?

மாட்டேன் என்றால் யார் விடுகிறார்கள்? இது நாலாவது தடவை. இந்தத் தண்டனை எனக்கு ஏன்? எந்தப் பாவத்துக்காக ஏற்படுத்தப் பட்ட தண்டனை இது? விலங்கிட்டுக் கழுத்தில் கை வைத்து நீதிபதியின் முன் தள்ளிச் சென்று நிறுத்துகிற இந்த அவலத்தை எனக்கு எதற்கு? பிடிக்கவில்லை என்றால் விட்டுவிட வேண்டியது தானே?

''அழுதுட்டா வர்ற?''

—அத்தையின்குரல் அதிர்ந்து போய் வந்தது.

அருணா பதில் சொல்லாமல் நகர்ந்தாள். சட்டென அவள் தோளைப் பிடித்து நிறுத்தினாள் கோமதி.

''என்ன ஆச்சு அருணா?... ஏன் இப்படி அலங்கோலமா இருக்கே? அவங்கள்லாம் இப்ப வந்துடுவாங்க. போய் மடமடன்னு நீட்டா டிரஸ் பண்ணிக்கோ...''

''வேண்டாங்க்கா...என்னைவிட்டுடேன்!''

''ஏன்?... என்னன்னு சொல்லு... ஒவ்வொரு தடவையும் வர்ரவங்கல்லாம் புடிக்கல புடிக்கலன்னு அழுவுறியாமே... ஏன்? பொண்ணு பார்க்க யாராவது வர்ராங்கன்னுலே கலாட்டா பண்றியாமே... என்ன விஷயம்?''

''கல்யாணமே பிடிக்கலே...''

''அட!'' — கோமதி வியந்தாள். ''கல்யாணமே பிடிக்கலையா? ஏன் நாங்கள்லாம் கல்யாணம் பண்ணிக்கிட்டு இப்ப வாழலே? என்ன கெட்டுப் போயிட்டோம்...''

''எனக்குப் பிடிக்கலே...''

''அதான் ஏன்னு கேக்கறேன். வயசுப் பொண்ணு கல்யாணம் பிடிக்கலேன்னு சொன்னா காரணம் இல்லாம இருக்காதே... நீ யாரையாவது மனசுல நெனைச்சுக்கிட்டிருக்கியா?''

அருணா சட்டென நிமிர்ந்து முறைத்தாள்.

''உன்னை இன்னொருத்தன் கையிலே பிடிச்சுக் குடுத்தாத்தான் அப்பா இங்கே நிம்மதியாத் தூங்க முடியும்.''

''அதுக்காக....? அப்பாவுக்காக நான் பலியாகணுமா? நான் பாரமா இருக்கிறதா அவர் நெனைச்சா நான் வேறு தனியாப் போயிடறேன்...''

''போலே, போலே... நீ பொம்பளை... தனியா ரோட்ல போனா நாலு கண்ணு உரிச்சுப் பார்க்கும்.... தனியாப் போய் வாளாம், தனியா... சம்பாதிக்கிறோம்கற திமிருதானே உன்னை இப்படியெல்லாம் பேசச் சொல்லுது....''

''ச்சே... என்னக்கா நீகூட இந்த மாதிரில்லாம் பேசிக்கிட்டு... என்னை ஓரளவு புரிஞ்சுக்கிட்டவ நீ ஒருத்திதான்னு நான் நெனைச்சுக்கிட்டு இருந்தேன்....''

''சரி. உன் இஷ்டப்படியே இனிமே நடந்துக்கோ... நானும் அப்பா கிட்டச் சொல்லிட்டுப் போறேன். உன்னைக் கட்டாயப்படுத்த வேண்டாம்னுட்டு. ஆனா இன்னைக்கு ஏற்கனவே ஒத்துக்கிட்டாச்சு. அவங்களை வரச்சொல்லியாச்சு... மூஞ்சில அடிச்ச மாதிரி திருப்பி அனுப்ப முடியாது. வரட்டும். வந்து பார்த்துட்டுப் போவட்டும்... அப்பாவுக்காக இந்த ஒரு தடவை மட்டும் நீ ஒத்துக்கிட்டு ஆவணும்... ப்ளீஸ்....''

இதற்கு மேல் என்ன பேச முடியும்?

''சரி... ஆனா ஒரு கண்டிஷன்'' என்றாள் அருணா.

''என்ன?''

''ஹாலுக்குள்ள நுழையறச்சே தலையைக் குனிஞ்சுக்கிட்டு நுழைய மாட்டேன். கை காட்டறவங்க காலல்லாம் விழ மாட்டேன். தரைல உட்கார மாட்டேன். எனக்குப் புடிச்ச எடத்துல, சோபாவிலேதான் உக்காருவேன்.... சாதாரணமாகத்தான் டிரஸ் பண்ணிப்பேன்!''

கோமதிக்குத் திடீரென்று கோபம் வந்தது.

''எக்கேடாவது கெட்டுத் தொலை...''

சரேலெனக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். அருணு அயராமல்,



கதவைத் தான் போட்டுக் கொண்டு, கண்ணாடிக்கு முன் போய் நின்றாள்.

அவர்கள் நாலு பேர். அவன் சாதாரணமாய் உடுத்தியிருந்தான். சந்தனக் கலர் பாண்ட். சிகப்பு சட்டை. செருப்புகள்.
முகத்தைப் பார்த்தாள்.
கொஞ்சம் கன்னங்கள் உப்பிய முகம். தடிமனாய்ப் புருவங்கள். சாந்தமான கண்கள். தாமதித்து வலப்புறம் திரும்பிய நாசி. உதடுகள் ஓரங்களில் மேல் புறமாய், நிரந்தர புன்னகையாய் வளைந்திருந்தன. திடமான உடம்பு. 'ஆள் பரவாயில்லே...' அருணா மனத்தில் சொல்லிக் கொண்டாள்.
பேச்சு மெல்ல ஆரம்பித்தது. அரசியல், விலைவாசி, டாக்ஸிக்காரனின் அடாவடித் தனம், என்று பாதை மாறி மாறி ஓடிற்று.
அருணா ஒரு நாகரிகம் கருதி அவனைக் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொன்னாள்.
திடீரென்று அவனும் உரையாடலில் கலந்தான். "உங்களுக்கு ம்யூஸிக் பிடிக்குமா?"
"பிடிக்கும்."
"கர்னாடிக்கா... லைட்டா?"
"ரெண்டும்."
"எனக்கு லைட் ம்யூஸிக்ல தனி அட்ராக்ஷன் உண்டு."
யார் கேட்டார்கள்?
"பாட்டெல்லாம் கத்துக்கிட்டு இருக்கீங்களா?"
"ம்...."
"ஒரு பாட்டு எனக்காகப் பாடிக் காட்டறீங்களா?"
"ஐ'ம் ஸாரி..." என்றாள் அருணா. அவனுக்கு முகம் சுருங்கிற்று.
"அரு...ணா..."
"ஸாரி...ஸார்..." "ஐ டோண்ட் லைக் இட்."
"கோவிச்சுக்கக் கூடாது... சின்னப் பொண்ணு..." என்று அப்பா அவர்களிடம் குழைந்தார்.
"பரவாயில்லே..." என்றான் அவன். "அப்ப நாங்க புறப்படறோம்."
சட்டென்று பெரிய திரை இறக்கின மாதிரி முகங்கள் சோர்ந்து இறுகின.
கோமதிக்கு ஆத்திரம் பொங்கிற்று. அத்தைக்கு எரிச்சல் வந்தது. அப்பாவுக்கு அவமானமாக இருந்தது.

---

பெண்மணி: "செக்கச் செவேல்"ன்னு சிவப்பு கலர்லே "ஐடெக்ஸ்" கிடைக்குமா...?
கடைக்காரர்: எதுக்கும்மா...?
பெண்மணி: எனக்கு "மெட்ராஸ் ஐ" அதுக்கு மேட்சா போட்டுக்கத்தான்! - வனமணி






"அருணா... உன்னைத் தேடி யாரோ ரிஸப்ஷன்லே காத்துக்கிட்டு இருக்காங்க."
பார்த்துக் கொண்டிருந்த பத்திரங்களைக் கவனமாய்ப் பிடித்துக்கொண்டு அருணா நிமிர்ந்தாள். ராஜேஸ்வரி நின்று கொண்டிருந்தாள்.
"சரி வரேன். நீ போ."
மாடிப் படிகளில் மெல்ல இறங்கும்போதே அவன் தெரிந்தான். "என்ன?" என்றாள் அவனை நெருங்கியதும்.
"எனக்காக ஒரு பத்து நிமிஷம் ஒதுக்க முடியுமா?"
"சரி...காண்டீனுக்குப் போகலாம்" என்றாள்.
"மிஸ் அருணா... நான் இங்கே வருவேன்னு நீங்க எதிர்பார்க்கலே இல்லே?"
"ஆமா."
"எனக்கு நேத்து ராத்திரி தூக்கமே வரலே. கண்ணை மூடினா உங்க முகம்தான் வந்து நின்னது. சரி.... ப்ளெய்னா பதில் சொல்லுங்க... நேத்து நிகழ்ச்சி பத்தி உங்க அபிப்பிராயம் என்ன?"
"பிடிக்கலே."
"ஏன்?"
"எனக்கு ஆம்பிளைங்க பேர்ல நம்பிக்கை கெடையாது.... சந்தர்ப்பவாதிங்க..."
"எதை வைச்சுச் சொல்றீங்க?"
"ஆயிரம் காரணம் சொல்லலாம்."
"நீங்க ஏமாந்திருக்கீங்களா?"
"இல்லே. எவரையும் நம்பி நான் இன்வால்வ் பண்ணிக்கிட்டதில்ல. எவனாயிருந்தாலும் ஒரு ஸேஃப் டிஸ்டன்ஸ் குடுத்துத்தான் பழகுவேன்."
"பின்ன எதை வச்சு ஆம்பிளைங்க மட்டம்னு முடிவு செஞ்சீங்க?"
"எங்க செக்ஷன் சித்ராவை வச்சே சொல்லலாம். அவ புருஷன் என்ன பாடு படுத்தறாராம் தெரியுமா? ரெவின்யூ ஸ்டாம்புக்கு இருவது பைசா போக மிச்ச சம்பளம் அப்படியே அங்க போய்ச் சேரணுமாம்... ஒரு ஹேர் பின் வாங்கணும்னா கூட அவன் கிட்டத் தொங்கிக்கிட்டிருக்கணுமாம். அவ என்ன கலர்ப் புடவை கட்டணும், எந்த பஸ்ல வரணும் எல்லாம் அவர் தான் டிஸைட் பண்ணுவார்...."
"அவர் ஒருத்தர் தான் உங்களுக்குத் தெரிஞ்ச ஆம்பிளையா?"
"சினிமாவிலேயும் சரி... டிராமாவிலேயும் சரி, எவ்வளவு ரேப்... கைவிடற கேஸு, எல்லாம் ஆம்பிளைங்கதான்...."
"கதை நெறையப் படிப்பீங்களா...?"
"நெறைய."
"ஜெனரலா ஆம்பிளைங்க மேலே இருக்கிற எரிச்சலாலே கோபத்தாலேதான் கல்யாணம் வேண்டாம்னீங்களா?"
"ஆமா... எனக்கு வரப்போறவனும் ஆம்பிளைதானே? அன்னைக்கு ராத்திரி அவன் இழுப்புக்கு மசிஞ்சு குடுக்கணும்."
"உங்க நெனைப்பு ரொம்ப சின்ன சர்க்கிளுக்குள்ளேயே இருக்கு... உங்க அப்பாவைப் பத்தி என்ன அபிப்பிராயம்?"
"அவரும் ஆம்பிளைதானேன்னு கேட்டு மடக்கலாம்னு? அவர் அந்தக் காலத்து

மனுஷன். எனக்கு இன்னித் தேதிலதான் ஆம்பிளைங்க பேர்ல நம்பிக்கை விட்டுப் போச்சு.''

''என்னைப் பத்தி என்ன நெனைக்கிறீங்க?''

''ஒண்ணும் நெனைக்கலே... உண்மையைச் சொல்லணும்னா உங்க பேர்கூட சரியாத் தெரியாது. சூர்ய நாராயணனோ என்னவோ...?''

''சூர்யகுமார்.'' என்றான் அவன். ''நான் இன்னிக்கு உங்களைப் பார்க்க வந்த காரணமென்ன தெரியுமா? எனக்கு உங்களை ரொம்ப பிடிச்சுப் போச்சு... உங்களுக்கு என்பேர்ல தனிப்பட்ட வெறுப்பு இல்லேன்னும் தோணிச்சு.''

''ஏன்?''

''ஏன்னா, நான் வரதுக்கு முன்னாடி நீங்க சந்தோஷமா இருந்த மாதிரியோ, என்னைப் பார்த்த உடனே கரத்தில்லாம போன மாதிரியோ தோணலே... கண்ணெல்லாம் செவந்து போய் இருந்தது. அழுதீங்களோன்னு நெனைச்சேன்.... அதனால உங்க கோபம் என் மேலே இல்ல... வேற யார் மேலேயோன்னு! இது கட்டாயக் கல்யாணமா?''

''கல்யாணமே கட்டாயம்தான்.''

''வேற யாரையாவது லவ் பண்றீங்களா?''

''எவ்வளவு இடியாடிக்கா பேசறீங்க... ஐ ஹேட் மென்.''

''அப்ப நான் தைரியமா எடுத்துச் சொல்லலாம்.''

''என்ன சொல்லணும்?''

''ஆம்பிளைங்களைப் பத்தி...''

''சொல்லுங்க... டயமாயிடிச்சி.''

''நீங்க நெறையப் புஸ்தகம் படிக்கறீங்க....''

''அதனால....''

''பொம்பளை ரைட்டர்ஸ் ஆம்பிளைங்கள சரியாத் தெரிஞ்சுக்காம எழுதறதைப் படிச்சிட்டு நீங்க உங்க கற்பனைல ஒரு ஆம்பிளை இப்படித்தான் இருப்பான்னு ஒரு ஃபார்முலா தயார் பண்ணி வச்சிருக்கீங்க...''

''சித்ரா புருஷன் கூட அப்படிப்பட்ட கற்பனையில சேர்த்தியா?''

''ஆயிரத்தில அங்கொண்ணு இங்கொண்ணு தப்பாப் போகலாம்... உங்க அக்காவுக்குக் கல்யாணம் ஆச்சே... ஏதாவது ப்ராப்ளம் வந்ததா? பொம்பளைங்கள்ல தப்பு பண்றவங்களே கெடையாதா?''

''நீங்க என்ன சொல்ல வரீங்க?''

''நெதானமா யோசிச்சுப் பாருங்கன்னு சொல்ல வர்றேன்... லைஃபே ஒரு சாலைன்னு மாதிரிதான். பஸ்ல போறோம்.,—வரோம். என்னிக்கு அடிபட்டுச் சாகப் போறோம்னு தெரியாது. அதுக்காக பஸ்ல போகாமயா இருக்கோம்...''

''அழகாச் சொல்றீங்க.''

''தாங்க்ஸ்.. இத்தனை நேரம் பேசினதில இப்பத்தான் உங்க முகத்தில சிரிப்பையே பாக்க முடியுது... நல்லா நீஞ்சத் தெரிஞ்சவன் தண்ணிலே சாகலாம். நீச்சலே தெரியாதவன் பொழச்சு வந்திடலாம்... எது எப்படின்னு யாருக்குத் தெரியும்?''

சூர்யகுமார் நிறுத்திவிட்டு அவள் முகத்தைப் பார்த்தான். சர்வர் கொண்டுவந்த காப்பியில் ஈ மொய்த்துக் கொண்டிருந்தது.



அவன்: ''ஜோக்கான கனவு ஒண்ணு கண்டேன் நேற்று!''

இவன்: ''யாருடா வந்தது கனவில் ... ஸ்ரீதேவியா, ஸ்ரீப்ரியாவா?''

அவன்: ''ரெண்டுபேருமில்லே... வெ. சீதாராமனும், பெ. கலாசாமியும்!'' உ. ராஜாஜி

''நீங்க என்னையே பார்த்துக்கிட்டு இருந்ததில உங்க காஃபியை மறந்திட்டீங்க... வேற காப்பி சொல்லிடவா?''

''வேண்டாம்... நீங்க சொல்ல வந்ததைச் சொல்லுங்க.''

''நான் என்ன சொல்றேன்னா, முன்னயாவது கல்யாணமாயிட்டா சாகறவரைக்கும் புருஷன்தான் தெய்வம்... இப்ப அப்படியில்லே. பிடிக்கலேன்னா வேலையை ரிஸைன் பண்ற மாதிரி டைவர்ஸ் பண்ணிட்டு வந்துடலாம். யோசிச்சுப் பாருங்க. கோழைத்தனமா குறுகிய மனப்பான்மையோட நடந்துக்காதீங்க. என்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கணும்னு அப்ளிகேஷன் போடலே. என்னை பர்ஸனலா வெறுத்து ஒதுக்கலேங்கற தைரியத்திலேதான் இத்தனையும் பேசறேன்.''

அருணா அசையாமல் உட்கார்ந்திருந்தாள். இத்தனை நாள் கல்லாய் இறுகின மனசின் ஒரு விளிம்பில் ஏறி அவன் நின்றுகொண்டு அதைப் பெயர்த்து விட்டது போல் தோன்றிற்று.

''நான் யோசிக்கணும் மிஸ்டர் சூர்யகுமார்...''

''செய்ங்க. நான் காத்திருக்கப் போறேன். கொறைஞ்சது இன்னும் ஒரு மாசமாவது காத்திருப்பேன் உங்க பதிலுக்காக. வரட்டுமா?''

பத்து நிமிஷம் என்பது அரை மணி ஆகியிருந்தது. அவனுடன் ஆஃபீஸ் வாசல் வரை நடந்து வந்தாள். ஒன்றும் பேசவில்லை.

''பை தென்...'' அவன் விலகி நடந்தான்.

அவன் கேட்டை அடைகிற வரை பார்த்துக்கொண்டு நின்றாள். மனசுக்குள் நிறைய குழுக்கல்கள். திடீரென்று ஏதோ நினைத்துக்கொண்ட மாதிரி ஓடிப்போய் அவனைப் பிடித்தாள் அருணா.

''ஒன் மினிட் சூர்யகுமார்... கொஞ்சம் வெயிட் பண்றீங்களா? நான் அரை நாள் லீவு எழுதிக் குடுத்துட்டு வரேன்... உங்க கூட இதைப் பத்தி நிறையப் பேசணும்.''

குளத்தில் விழுந்த கல் சலனத்தை ஏற்படுத்திற்று போலும்!

# லக்ஷ்மி

100% பாலியெஸ்டர்
புடவைகள்



லக்ஷ்மி மில்ஸ்,
கோயம்புத்தூர்

# பூமியை நனைக்காத மழை

பிரதீபா ராஜகோபாலன்

**ரா**ஜ வீதியும் ஒப்பண்ணக்கார வீதியும் சந்திக்கும் இடத்தில் பஸ்ஸுக்குக் காத்திருந்த வெங்கிடு சார், பக்கத்தில் இருந்த பூக்காரியிடம் பூ வாங்கிக் கொண்டிருந்த பெண்ணைப் பார்த்ததும் இதயத்தில் ரத்த ஓட்டம் அதிகரிக்க ''மாணிக்கம்'' என்று அழுத்தமான குரலில் கூப்பிட்டார்.

பூ வாங்கிக் கொண்டிருந்த அந்தப் பெண் மின்னலடித்தாற்போல் நிமிர்ந்து பார்த்து விட்டு முகத்தில் நிறைய மாறுதல்களுடன் சட்டென்று அங்கிருந்து விலகி, மேற்கே ராஜ வீதியில் அவசரமான முற்பகல் கூட்டத்தில் கலந்து விட்டாள்.

வெங்கிடுசார், ''மாணிக்கம், மாணிக்கம்'' என்று உரத்த குரலில் கூப்பிட்டுக்கொண்டு நாலு எட்டு வைத்தார். ஆனால், தன் பெண் தன்னைக் கவனித்து விட்டுத்தான் விலகிப் போகிறாள் என்று உணர்ந்ததும் அவமானம் பொங்கி அப்படியே நின்று விட்டார்.

ஒரு விநாடியில் இந்த விஷயம் நடந்து விட்டதாக உணர்ந்தார் அவர். ''ஆருங்க அந்தப் பொண்ணு?'' என்று பூக்காரி கேட்டாள், குரலில் நேசமான தன்மையுடன்.



''என் பொண்ணும்மா. சொந்தப் பொண்ணு. பார்த்து ஏழு வருஷமாச்சு. நான் கூப்பிடறேன்னு தெரிஞ்சதும் மூஞ்சிலே அடிச்சாப்ல போறதப்பாத்தியாம்மா?'' என்று வெங்கிடு சார் குரல் உடைந்து ரத்த ஓட்டமே தடுமாறிப் போனவராய்க் கேட்டார்.

''உங்க பொண்ணுன்னுப் பேசாமப் போகுறுங்களா? பாக்காமக் கூப்பிட்டீங்களோ என்னவோ?''

''ஏம்மா, நான் இருபத்தி ஏழு வருஷமா பெத்து வளர்த்தவன்... எனக்குத் தெரி



யாதா? அவ கால் கண்டு வெரல வெச்சே அடையாளம் சொல்லிடுவேன்....'' என்று உணர்ச்சி வசப்பட்டார்.

''பின்னென்ன, அந்தப் பொண்ணு ஓட்டமா ஓடுது?... உங்களுக்குள்ள மனஸ் தாபமா?''

''மனஸ்தாபம்னு நெனச்சா மனஸ்தாபம் தான்....ம்....'' என்றவர் தம் மேல் துண்டால் முகத்தையும் பின் கழுத்தையும் துடைத்துக் கொண்டார்.

''எந்த ஊருங்க நீங்க...'' என்று பூக்காரி கேட்கக் கேட்க அவர் போக வேண்டிய பஸ் வந்து விட்டது. முட்டி மோதிய கூட்டத்தில் முயற்சி செய்து ஏறிக்கொண்டார்.

''நம்ம மாணிக்கத்தைப் பார்த்தேன்னு சொல்றீங்க?'' என்று வெங்குடுசாரின் மனைவி ரெண்டு மூன்று தரம் கேட்டதும் அவருக்குக் கோபம் அரும்ப ஆரம்பித்து விட்டது.

''நான் என்ன இந்த வேகற வெயில்ல வந்ததும் உடனே உன்கிட்டப் போய் சொல்லணும்கிறதா ஆசை?... நான் மாணிக்கம்னு சத்தமாக் கூப்பிட்டதும், பூ வாங்கிட்டு இருந்தவ, நொடியில என்னைப் பார்த்துட்டு, ஏதோ ஆகாதவனைப் பார்த்த மாதிரி, என்னமா காலை எட்டி வச்சு, அந்தக் கூட்டத்தில மறைஞ்சுட்டா... நான் என்னடி அவ்வளவு வேண்டாதவனாய்ப் போய்ட்டேனு?''

''அவ கல்யாணத்த ஏத்துக்கல... அந்த ரத்தினபுரிக்காரனைப் பண்ணிட்டியானு, இந்த வீட்டுக்குள்ள காலையே வெக்கக் கூடாது, எம் மூஞ்சிலேயும் முழிக்கக் கூடாதுன்னு சொன்னீங்கல்ல?''

''அதுக்கோசரம்?''

''அதுக்கோசரந்தான் அவ உங்க கிட்டப் பேசப் புடிக்காம வெலகிப் போய்ட்டா!''

''நான்தான், அய்யோ நம்ம புள்ளைய இப்பவாவது பாக்கறமேன்னு, பழசெல்லாம் மனசிலிருந்து தூக்கி எறிய உட்டுட்டு என்னோட இருதயமே அவகிட்ட பாஞ்சு ஓடி இறுக்கிப் புடிக்கிறாப்பல மாணிக்கம்னு கத்தறேன். பெத்து வளர்த்தின அப்பன்னு கொஞ்சமாவது பாசமும் மரியாதையும் இருந்தா என்னப்பான்னு என்னைப் பாத்து

வந்திருப்பாள்ல... எல்லா ஜடங்கடி, களி மண்ணுக. உங்களுக்கெல்லாம் ஒழைச்சு கிடையராகிப் பென்ஷன் வாங்கி அதும் பத்தாம ராப் பகல்னு பாக்காம பசங்களை வெச்சு மாரடிச்சு நாலு காசு சம்பாதிச்சு வயிறு காயாமச் சோறு போடறேன் பாரு. அதுக்கு என்னை ஜோட்டால அடிக்கணும்.'' என்றவர், சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டிவிட்டுப் பின் பக்கமாகப் போனார்.

உடம்பைத் துடைத்துக் கொண்டு உள்ளே போய், வேட்டி மாற்றிக் கொண்டிருக்கையில், ''என்னங்க வண்டி வந்திருக்கு?'' என்று குரல் கொடுத்தாள் மனைவி.

''ம். நீ சோத்தைப் போடு. சின்னவன் எங்க போனான்?''

''ஆரோ சிநேகிதனும். கூடக் காலேஜ்ல படிச்சவனும். ரெண்டு பேரும் மாரியப்பன் மகன் கல்யாணகுமாரு வீட்டுக்குப் போனாங்க...''

''ம்... அவன் வந்தா, இன்னைக்கு இண்டு பேப்பர்ல ஸ்டேட்பாங்ல கிளார்க்கு போஸ்ட்டுக்கு விண்ணப்பம் கேட்டு விளம்பரம் வந்திருக்குன்னு சொல்லு. இவனுக்கு ஒரு வேலை கெடச்சுத் தொலைஞ்சா, நம்மளைப் புடிச்ச கெரகம் கொஞ்சம் நீங்கும்.''

''இப்ப டியூசனுக்குப் போறீங்களே அந்தச் செல்வி இட்டச் சொல்லி ஒரு பத்து ரூபா வாங்கிட்டு வர்றீங்களா?'' என்று மெல்லிய பயந்த குரலில் சொல்லச் சொல்ல வெங்கிடு சார், ''என்னத்துக்கு?'' என்று கண்ணை சுருட்டி மனைவியைப் பார்த்தார்.

''வேறொ இல்லே... நேத்தே பொடக் காளில இருந்த காஞ்சபோன வேப்பங்





குச்சிகளையும் செத்தைகளையும் போட்டு எரிச்சேன். காலேல இருந்த ராந்தல் எண்ணெயும் ஊத்தி ஸ்டவ்வை எரிச்சாச்சு.''

மீதிச் சோற்றை விழுங்கிவிட்டு, சட்டையை மாட்டிக் கொண்டு இரட்டை மாட்டு வண்டியில் ஏறிக் கொண்டார்.

வெங்கிடு சாருக்கு வயது அறுபத்து ரெண்டாயிற்று. பார்ப்பதற்கு நாற்பதுக்கு மேல் சொல்ல வராது. சாருக்கு ஒரே பெண். மூன்று பையன்கள். பெண்ணைத் தூசு தும்பு படாமல் வளர்த்தார். தினமும் பள்ளியிலிருந்து வரும்போது மல்லிகை இரண்டு முழமோ, முறுக்குச் சரமோ, மிக்சர் பொட்டலமோ வாங்கி வராமல் இருக்க மாட்டார். பெண்ணை உறவினர் வீட்டுக்கு ஒரு நாள் கூட அனுப்பி வைக்க மாட்டார். அவள் பத்தாவது படித்து முடித்ததும் டைப்ரைட்டிங் கற்றுக்கொள்ள அனுப்பினார். அங்கே சொல்லித் தரும் இன்ஸ்ட்ரக்டர் அவளுக்குக் காதல் கடிதம் கொடுக்க முயன்றார் என்று தெரிந்து தம் பள்ளிக்கூடப் பையன்களை விட்டு அவரை நாலு சாத்துச் சாத்தச் சொல்லி ஏவிவிட்டார். ஊராரும் வெங்கிட்டு சாருக்கு சப்போர்ட் செய்தார்கள். தம் பெண்ணை அதிலிருந்து வீட்டை விட்டு வெளியே அனுப்பாமல்தான் இருந்தார். ஆறு மாசம் கழித்து அவளுக்கு சர்வீஸ் கமிஷன் மூலம் கலெக்டர் ஆபீஸில் ஜூனியர் அஸிஸ்டெண்ட் வேலை கிடைத்தது. ஊரிலிருந்து தினமும் போய் வந்தாள்.

ஒரு நாள் சாயந்திரம் வெங்கிடு, முத்துசாமி விவசாய மருந்துக் கடையில் பேசிக் கொண்டிருந்தபோது அவன் மெல்லிய குரலில் சொன்னான்:

''வெங்கிடு சார், ஒண்ணு சொல்றேன். கோபிச்சுக்காதீங்க. உங்க பொண்ணும் இங்க இருந்தானே டைப்பு ஸ்கூல்ல ரத்தினபுரிக்காரன் — அவனும் கடலைக்கார சந்துப் பக்கம் மித்ர சமாஜம் இருக்குதே அங்க காப்பி குடிச்சுக்கிட்டு இருந்தாங்க. அவங்க பேசிக்கிட்டிருந்த பேச்சில இருந்து ரெண்டு பேரும் தினமும் சந்திக்கிறாங்க போலிருக்கு.''

''என்ன?'' வெங்கிடு சார் வெகுண்டெழுந்து வீட்டுக்குப் போனார்.

அப்போதுதான் பெண் வீடு திரும்பிப் புடவை மாற்றி சோப்பு மூக்குக்குக் கீழே முகம் கழுவிக் கொண்டிருந்தாள். சோப்பு நுரை முகத்தில் இருக்கவே இரண்டு கைகளாலும் அவள் கன்னத்தில் ஓங்கி ஓங்கி அறைந்தார்.

''வெக்கம் மானம் இல்லாத கழுதே... போயும் போயும் அந்த ரத்தினபுரிக்காரன் தானு கெடச்சான் தினமும் சந்திச்சுக் காப்பி குடிக்கிறதுக்கு?''

மகள் இந்த அதிரடித் தாக்குதலால் சிலிர்த்துக் கொண்டு சீறினாள்.

''நான் அந்த ஆளைத்தானே கல்யாணம் பண்ணிக்கப் போறேன். என் மேலே ஆசைப் பட்டுத்தானே லெட்டர் குடுத்தார். எனக்கும் புடிச்சிருந்தாப் பண்ணிக்க வேண்டியது தானே? சும்மா மெரட்டாதீங்க...'' என்று மகளும் எகிறினாள்.

அன்றைக்கு வெங்கிடு சாருக்குக் காய்ச்சல் என்று வந்து இடதுபுறம் முழுதும் செயல் இழந்து படுத்துவிட்டார். ஆறு மாசம் கோட்டயம் போய் சிகிச்சை எடுத்துக்கொண்ட பின்தான் குணமானார். அடுத்த மாசத்தில் ரிடையர்மெண்ட் வாங்கிக்கொண்டார்.

''இனிமே அவ இந்த வீட்டுக்குள்ளார நொழையக் கூடாது. என் மூஞ்சியிலயும் முழிக்கக் கூடாது'' என்று தெரிந்தவர் மூலம் சொல்லி விட்டார்.

கல்யாணமாகி ஏழு வருஷமாகிவிட்டது.

இரண்டு பையன்களும் ஒரு பெண்ணும் பிறந்தன என்று சொன்னார்கள். சார், மனசைப் பாறாங்கல்லால் இறுக மூடிக் கொண்டார். ஆனால் இந்த இரண்டு மாச மாய் அவரையும் அறியாமல்பெண்ணின் மீது ஞாபகம் ஊற்றெடுக்க ஆரம்பித்தது. அதற்குத்தகுந்தாற்போல் இன்றைக்குப் பெண்ணைப் பார்த்ததும் அவரையும் அறியாமல் 'மாணிக்கம்' என்று கூப்பிட்டு விட்டார்.

அவள் திரும்பிப் பார்த்துப் பேசியிருந்தால் வெங்கிடு சார் பூரிப்பினால் மனசு விரிந்து பூமிக்கும் வானத்துக்குமாக வியாபித்து இருப்பார். மனசுக்குள் கடலடி ஊற்றுக்களாக இருக்கிற பாசமும் ஞாபகச் சுமைகளும் பீறி அடித்துக் கொண்டு வெளியே வந்திருக்கும். ஆனால் அப்படி நேரவில்லை.

செல்வி வீட்டில் டியூஷன் சொல்லிக் கொடுத்துவிட்டு, அவள் அப்பாவிடம் பத்து ரூபாயும் வாங்கிக் கொண்டு வழக்கமாக அவர்கள் வண்டியில் வீட்டுக்குத் திரும்பும் போதுதான் வெங்கிடு சாரின் மனத்தில் அந்தக் கேள்வி எழுந்தது.

மனைவியிடம் பணத்தைக் கொடுத்தவர், ''ஆமா, நான்தான் முன்கோபி. உணர்ச்சி வசப்பட்டவன். மொரட்டுத்தனக்காரன். அன்பையும் பாசத்தையும் கட்டுப்படுத்தறவன். ஆனா, நீ இதுக்கெல்லாம் நேர் மாறு. ஏழு வருஷம் பாக்காதிருந்த என் னாலேயே புள்ளையைப் பார்த்ததுமே மாணிக்கம்னு கூப்பிட்டு அவபின்னால போகப் பார்த்தேன். உன்னால அவளைப் பத்திப் பேசாம, பாக்காம,பாக்கணும்னு சொல்லாம இருக்க எப்படி முடியுது?'' என்று கேட்டார்.

''நீங்க கேக்கறது சரிதாங்க. அவளைப் பாக்கவோ, அவகூடப் பேசவோ வேண்டான்னு எவக்கும் பசங்களுக்கும் கண்டிப்பா ஆர்டரு போட்டிருந்தீங்க. நீங்களும் அப்படியே நடந்துட்டு, அவளைப் பத்தி ஒரு வார்த்தை கூடப் பேசாமப் புடிவாதமா இருந்திட்டீங்க. ஆனா, அப்பேர்ப்பட்ட நீங்களே நேருக்கு நேர் புள்ளையப் பாத்ததும் மனசு கலங்க உறுதி கலங்க, கூப்பிட்டீங்க. ஆனா, அதே சமயம் நான் அப்படி நடந்திருந்தா என்ன பண்ணுவீங்க... என்னே ஒரு வழி பண்ணி யிருப்பீங்க இல்லையா? இப்ப ஆர்டரு போட்ட நீங்களே அந்தத் தடையை ஒடச்சப்ப இதுவரைக்கும் உங்க தடையை மீறும இருந்தது எங்க பைத்தியக்காரத்தனம்தானே? நீங்களே ஆர்டர் போட்டு நீங்களே மீறிட்டு வந்த விஷயத்துக்கு நாங்க ஏன் அடங்கி இருக்கணும்?''



இரவில் காரில் போய்க்கொண்டிருக்கும் போது திடீரென்று கார் நின்று விடுகிறது. 'பானெட்'டைத் திறந்து பார்க்க விரும்புகிறீர்கள் ஆனால் உங்களிடம் 'டார்ச்' இல்லை. என்ன செய்வது! காரின் முன்புற விளக்குகளைப்போடுங்கள். காரின் உள்ளேயிருக்கும் நியூஸ் பேப்பரை எடுத்து அந்த 'லைட்'டுகளின் முன்பு பிடியுங்கள். இப்போது அந்த பேப்பர்,வெளிச்சத்தை எஞ்சினுக்குள் பிரதிபலிக்கும்!

'டிட்பிட்ஸ்' —அனிதா ராமச்சந்திரன்

வெங்கிடு சார் சிலிர்த்துப் போய்விட்டார். அதிகம் படிக்காத, அதிகம் பேசாத மனைவியின் வார்த்தைகள் அவரைச் சிலுவையில் அடித்தது போலிருந்தது. அவளை நேராகப் பார்க்க முடியாது வேறு பக்கம் பார்த்தார்.

''நீங்க ஆம்பிளே. சம்பாதிக்கப் போடறோம்கிற சலுகையில என்னே அடக்கலாம். நாணும் அடங்கலாம். ஆனா, நான் அவளைப் பத்து மாசம் சொமந்து பெத்தவ. என்னோட ரத்தத்தில ஊறினவ. நான் அப்படி உங்க மாதிரி ஓணர்ச்சியை அடக்கிகிட்டுக் கல்லா இருக்க முடியாது. அவளே நான் பெத்த மாதிரி அவளும் கொழந்தை பெத்த போது நான் ஜடமா உட்கார்ந்திருக்க முடியலே. உங்களுக்குத் தெரியாம பல தடவை போய்ப் பார்த்தேன். இப்பவும் மாசத்துக்கு ஒரு மொறை பார்த்துட்டு வர்றேன். என் பெத்த மனசு அடங்கலே. மேகம் ஆகாசத்துல இருக்கிறதனலே மழையா பூமியிலே தான் உளுது. ரொம்ப வீம்பா அங்கியா அடக்கி வச்சுக்குது? எப்படியும் பேஞ்சு தானே ஆகோணும்? பூமியை நனைக்காத மழை என்ன மழை?''

வெங்கிடு சார் ரத்தம் வற்றி வெளுத்து விரைத்துப் போன மனிதராய் அப்படியே உட்கார்ந்து விட்டார்.

''நான் புடிவாதம்னு ஒன்னே முகமூடியாப் போட்டிருந்தேன். என் வார்த்தையை மீறலேங்கிற மாதிரி இன்னொரு முக மூடியை நீ போட்டுட்டு வந்திருக்கிறே... இதுல நான்தான் பைத்தியக்காரன். வெவரம் கெட்டவன்'' என்று வார்த்தையாய்ச் சொன்னவர் ''நாளைக்குப் போய்ப் புள்ளையைப் பார்த்துட்டு வந்துறலாம்'' என்று சொல்லும்போது வெங்கிடு சாரின் முகம் தெளிவாக இருந்தது.


கல்கி
21.6.81
இதழில்
சந்திரநாத்
எழுதும்
நீயா?
மர்மத்
தொடர்கதை
ஆரம்பம்

சில தினங்களில் கஸ்தூரி குணமடைந்து விட்டிருந்தாள். படுக்கையினின்று எழுந்து உட்கார்ந்து கொண்டு வந்தவர்களைப் பார்த்து இரண்டு வார்த்தைகள் பேசக்கூடிய அள வுக்கு உடலில் தெம்பு கூடியிருந்தது.

ஆனால் அவளைத் தனியே கவனித்துக் கொள்ளத் தனிப்பட அமர்த்தப்பட்டிருந்த நர்ஸ், யாரையும் அதிக நேரம் அங்கே நிற்கக் கூட அனுமதிக்கவில்லை.

காலை, பகல், மாலை என்று மூன்று வேளை களும் அம்மாவைப் பார்க்க ஹர்ஷன் அலு வலகத்துக்கும், மருத்துவ மனைக்கும் இடையே அலைந்ததுதான் மிச்சம். காலை வேளையில் டாக்டர்கள் வரும் நேரமாகையால் அம்மா வைப் பார்த்துவிட்டுச் சட்டென்று அறை யின் வெளியே வந்து நிற்க வேண்டியிருந்தது.

பகல் உணவு நேரத்தின்போது அம்மா தூங்கிக் கொண்டிருந்தாள். பார்வையாளர் நேரத்தின்போது அவன் வேலை செய்த அலு வலகத்து ஆபீஸ் பையன் முதல் மேலதிகாரி வரை, ஒருவர் பின் ஒருவராக மாறி மாறி வந்து போய்க் கொண் டிருந்தார்கள்.

அம்மாவிடம் மனம் விட்டு ஒரு வார்த்தை கூட அவனுக்குப் பேசுவதற்கு அவ காசமே கிடைக்க வில்லை.



பார்வையாளர் நேரம் கழிந்த பிறகு, அறைக்குள்ளே தயக்கமாக நிற்பவனை, இரவு வேளை நர்ஸ் வந்து பள்ளிச் சிறுவனை அதட்டுவது போல் அதட்டுவாள். ''உஸ்! பேசாதீங்க. அவங்க இத்தனை நேரம் ரொம்ப பேசி அலண்டு போயிருக்காங்க. அவங் களுக்கு ஓய்வு தேவை'' — அவனைப் பய முறுத்தி விரட்டிவிடுவாள்.

அந்தச் சில நாட்களில் அவன் பட்ட மன வேதனை கொஞ்ச நஞ்சமல்ல.

மருத்துவ மனையிலிருந்து திரும்பு முன் வழியில் ஏதாவது ஒரு ஹோட்டலில் சாப் பிட்டுவிட்டு வீட்டுக்குத் திரும்பியவன் ,படுக் கையில் போய் விழுந்தால், உறக்கமேயின்றித் தவித்துக் கொண்டிருந்தான்.

அந்தச் சில நாட்களில் அவன் மாதங்கியின் அந்தக் கடிதத்தைப் பலமுறை படித்து விட்டான்.

வீட்டின் மருமகளாக வந்த அன்றே, ''இவள் வேண்டாம்'' என்று ஒதுக்க அவன் மனத்தில் துணிவிருந்தது. ஆனால் இப்போது?

அவளே வேண்டாம் என்று ஒதுங்கிவிடத் தீர்மானித்திருக்கிறாள் என்பதை ஏற்று ஜீர ணிக்க முடியாதவனாக, மனம் அவமானத் தில் தவிக்கத் துடித்துப் போனான்.

மாதங்கிக்கு விவாகரத்து வேண்டுமாமே? அவனை விட்டுப் பிரிந்த பின் அவள் என்ன செய்யப் போகிறாள்?

ஒருவேளை வேறு ஒருத்தனைக் கல்யாணம் செய்து கொண்டுவிடுவாளோ? முடியாது... முடியாது... அந்த அவமானத்தை அவனால் தாங்கிக் கொள்ள முடியாது....

மனத்தினுள் பலபல எண்ணித் தவித்தான் ஹர்ஷன். உணர்வுகள் குழம்பின நிலையில், உணவு பிடிக்கவில்லை. உறக்கம் வர மறுத் தது. ஒரே தத்தளிப்பு.

அன்று மருத்துவ மனைக்கு எதிரே இருந்த ஹோட்டலில் சாப்பாட்டை வேண்டா வெறுப்பாக முடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தான்.

மாடிக்குச் சென்று விளக்கைப் போட்டு உடை மாற்றிக் கொண்டு படுக்கை மீது சாய்ந்து கொண்டபொழுதுதான் அந்த யோசனை தோன்றியது.

சட்டென்று எழுந்தான். மாதங்கியின் கடிதத்தை பேழை இழுப் பறையிலிருந்து தன் டைரிக்குள்ளிருந்த எடுத் துப் பிரித்தான். மிகக் கவனமாக அந்தக் கடிதத் தில் முகவரியுடன் கொடுக்கப்பட்டிருந்த நர் மதா அம்மாளின் டெலி போன் எண்ணை ஒரு துண் டுக்காகிதத்தில் குறித்துக் கொண்டான்.

21

கழுத்தில்

இரவின் அந்த வேளையில் நர்மதா அம்மாள் நிச்சயம் தூங்கப் போயிருப்பாள். நேரிடைத் தொடர்பு கொண்டு தொலைபேசியில் மாதங்கியிடமே பேசிவிட்டால்....?

'ரத்த அழுத்தம் அதிகமாகி – மயக்கம் போட்டு விழுந்து காயத்துடன் அம்மா மருத்துவ மனையில் இருக்கிறார்கள்' என்று ஆரம்பித்துப் பேசிவிட்டால் என்ன?

'அம்மா உன்னைப் பார்க்க மிகவும் ஆவலாக இருக்கிறார்கள். உடனே புறப்பட்டு வா' என்று பேசினால் தவறு?

தனக்குத் தானே டலவாறாக ஆட்சேப சமாதானங்கள் கூறிக் கொண்ட பிறகு பரபரப்புடன் தொலை பேசியை இழுத்துத் தலைமாட்டு மேஜையருகில் வைத்துக்கொண்டான்.

துண்டுக் காகிதத்தில் குறித்துக்கொண்ட எண்ணை மடமடவென்று வேகமாகச் சுழற்றினான்.

''ஹலோ!'' – மறு பக்கத்திலிருந்து ஒலித்த குரலைக் கேட்டதும், அவனையறியாமல் திடீரென ஒரு சிலிர்ப்பு. கரம் லேசாக நடுங்கியது. மாதங்கியின் குரலேதான்!

''இத்தனை மாதங்களுக்குப் பிறகு கேட்ட அவன் குரல் இத்தனை புதுமையாக... மிக இனிமையாக.... அவன் மார்பு படபடத்தது.

''யார் பேசறது?''

''திருமதி நர்மதா அம்மா வீடுதானே?'' சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள மெல்லக் கேட்டவனுக்கு மூச்சு அடைத்துக் கொண்டது.

''ஆமாம்! நீங்க யார்?''

காது மடல்கள் சூடாகி, நெஞ்சுத் துடிப்பும் வேகமாகி... ஒரு கணம் அவமானத்தில் நொறுங்கிப் போனான் அவன்.

மனைவியின் குரல் அவனுக்குத் தெரிந்த அளவுக்கு அவளுக்கு அவனது குரல் விளங்காதது யார் குற்றம்? ''நீங்கள் யார்?'' என்று அவள் கேட்கும் அளவுக்கு எவ்வளவு தூரம் விலகிப் போய்விட்டிருக்கிறான்!

தைரியத்தை வரவழைத்துக் கொண்டவனாய், ''சென்னையிலிருந்து நான்தான் ஹர்ஷன் பேசறேன். – கஸ்தூரி அம்மாளின் மகன்'' என்றான் உரக்க.

மறு முனையிலிருந்து அழுத்தமாக மூச்சு விடுவது கேட்டது. தொடர்ந்து ஒரு மௌனம். அவன் மேலே பேசு முன் தொலை பேசி படக் கென்று துண்டிக்கப்பட்டுவிட்டது.

அவன் முகத்தில் யாரோ ஓங்கி அறைந்துவிட்டது போன்ற வேதனையும், வெட்கமுமாக ரிசீவரை வைத்தான்.

மாதங்கி அவனிடம் பேச விரும்பவில்லை. அவனைத் தெரிந்து கொள்ளவோ உறவைப் புதுப்பித்துக் கொள்ளவோ சிரத்தை காட்டவில்லை. அவனிடமிருந்து கடிதத்தில் கண்டபடி விவாகரத்து வாங்கிக் கொண்டு விலகிச் செல்லவே திட்டமிட்டிருக்கிறான்!

''ஐய்யோ! அவன் வாழ்க்கையில் ஒன்றன் பின் ஒன்றாக எப்படிப்பட்ட தலை குனிவுகள்?''

ஊர்மிளா அவனை உதறிவிட்டுப்போன விஷயம் ஊரே தெரிந்தது... அந்த அதிர்ச்சியிலிருந்து நிமிர்வதற்குள்... ஜயந்தி கல்யாணத்துக்கு முதல் நாள் மண்டபத்திலிருந்து மாய மானகிகிசுப்பு... அது அலுவலகம் முழுவதும்பரவி அவன் காதுகளிலும் லேசாக எட்டியபோது அனலை வாரித் தலை மீது கொட்டிய அவமானத்தில் பொசுங்கிப் போனான்.

இப்போது மாதங்கி....! ஐயோ! இந்த அவமானத்தை அவன் எப்படித் தாங்குவான்? ஹர்ஷன் படுக்கையில் வீழ்ந்தான். மாதங்கியை இந்த அளவுக்குக் கொண்டு வந்தது யார் காரணம்? ஆரம்பத்தில் அந்த வீட்டில் வாயில் மாத வேலைக்காரியாக அவளை



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1981

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் வழக்கம் போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**முதல் பரிசு ரூ. 1000**
**இரண்டாம் பரிசு ரூ. 500**
**மூன்றும் பரிசு ரூ. 500**
**(இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்)**

ஆகமொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளருக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- முடிவு தேதி ஜூன் 15.
- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

**ஆசிரியர் கல்கி, சென்னை-600 032**

அவன் எப்படிக் கேவலப்படுத்தி யிருக்கிறான்? எத்தனை சிறுமைகளை அவளுக்கு இழைத்திருக்கிறான்? இப்போது மட்டும் மாதங்கி விவாகரத்து வாங்கிக் கொண்டு போய்விடுவாளே என்று ஏன் பயந்து சாகிறான்? மாதங்கியைப் பிடிக்காமல் அவளை மீண்டும் வீட்டில் கொண்டு வந்து வதைப்பதில் என்ன பலனைக் காணப் போகிறான்?

''இல்லை...இல்லை.... அவன் இப்போது மாதங்கியை இழக்க விரும்பவில்லை! அது தான் உண்மை. அவளை மனைவியாக ஏற்று வாழ விரும்புகிறான். உண்மை விவரம் தெரிந்த பிறகு தன் செய்கைக்கு வருந்தி அவன் பச்சாதாபத்தில் பரிதவிப்பதை அவளிடம் யார் எடுத்துச் சொல்லப் போகிறார்கள்?''

தொலை பேசியை, வேண்டுமென்றே மாதங்கி துண்டித்து விடக் கூடிய பெண்ணா?

பலவாறு எண்ணி, நெஞ்சமெல்லாம் புண்ணாகிப் போனான் ஹர்ஷன். துயரத்தின் கனமையினால் கண்கள் உறங்க மறுத்தன.

**ம**றுநாட் காலை அலுவலகம் போகு முன் தாயாரைப் பார்த்துவிட்டு வர, சற்று முன்னதாகவே புறப்பட்டுப் போனான்.

கஸ்தூரியின் உடல்நிலை முற்றிலும் குணம் அடைந்து விட்டது என்றாலும், மருத்துவப் பாதுகாப்பில் இன்னும் சில நாட்கள் இருந்தாக வேண்டி யிருந்தது.

கதவை மெல்லத் தட்டிவிட்டுத் திறந்து கொண்டு உள்ளே சென்ற ஹர்ஷன், அம்மா படுக்கை மீது அமர்ந்தபடி பத்திரிகை ஒன்றைப் புரட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

''அப்பாடா! நல்ல வேளை, அறைக்குள் நர்ஸ், வேறு பணியாள் யாரும் இல்லை.'' சுற்று முற்றும் நோட்டம் விட்டுத் திருப்தியடைந்தவனாய், அம்மாவின் கட்டில் அருகில் கிடந்த நாற்காலி மீது உட்கார்ந்தான்.

''உங்க உடம்புஇப்ப எப்படிம்மாஇருக்கு''—அன்புடன் கேட்டபடி அவளைப் பார்த்தான்.

''தேவலை'' என்றபடி பத்திரிகையை மடித்து வைத்துவிட்டு, மகனை உற்றுப் பார்த்தாள் கஸ்தூரி.

இந்தச் சில தினங்களில் ஏற்பட்ட அலைச்சலில் அவனும் மிகச் சோர்ந்து காணப்பட்டான்.

''ரொவர் கூட ரொம்ப இளைத்துப்போய் விட்டது. நீங்களும் வீட்டில் இல்லையா? சாப்பிடாம அது ரொம்பப் பிடிவாதம் பிடிக்குதும்மா.''

கஸ்தூரிக்கு மகன் என்ன சொல்ல வருகிறான் என்று புரிந்து விட்டது!

''எனக்குக்கூடச் சாப்பாடே பிடிக்க மாட்டேங்குது. காலையில வெறும் வாட்டின ரொட்டியும் கூழும் குடுத்தாங்க.... வீட்டுக்கு வந்ததும் மெத்துன்னு தோசையும், தொட்டுக்கக் காரக் குழம்பும் செஞ்சு.... யாராச்சும்....'' முடிக்காமல் பெருமூச்சு விட்டாள்.

''நீங்க இங்க வந்த பிறகு...'' மென்று விழுங்கியபடி ஆரம்பித்த மகன் ''முன்னறை தரையில ஒரு கடுதாசி கிடந்ததை எதேச்

# முகூர்த்தமே முகூர்த்தம்!

முகூர்த்தம் நெருங்கிவிட்டது.
வாழ்வில், தகுந்தவளை அடையும்
முகூர்த்தம் நெருங்கிவிட்டது.
இந்த சுபமான
முகூர்த்தத்திற்கு
**சாரதா'ஸின்**
முகூர்த்த பட்டுப்புடவைகள்
மிகவும் சிறப்பு வாய்ந்தவை.

திருமணத்திற்கு ஏற்ற
பனாரஸ் புடவைகள் புதிய
டிசைன்களிலும் வண்ணங்களிலும்
வந்துள்ளன.



# சாரதாஸ்

(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)

**SARATHA'S**
MADRAS & TRICHY

| | |
|---|---|
| தன் பில்டிங் | |
| மவுண்ட் ரோடு | N.S.B. ரோடு |
| சென்னை-600 002 | திருச்சி-620 002 |
| போன் : 87177 | போன் : 27077 |

சையா எடுத்துப் பிரிச்சேன். அது... அது... மாதங்கியோட கடிதம்...'' தடுமாற்றத்துடன் முடித்தான்.

''நீயே விவரம் தெரிஞ்சுகண்டது நல்லதாப் போச்சு. உன் கிட்ட எப்படிச் சொல்றதுன்னு ரெண்டு நாளா என் மனசில ஒரே குழப்பம்....''

''குழப்பம், கவலை இதெல்லாம் உங்க உடம்புக்கு ஆகாது... அதையெல்லாம் தீர்க்க நான் ஒன்று செய்யப் போகிறேன்.''

கஸ்தூரி வியப்புடன் மகனைப் பார்த்தாள்.

''நானே பெங்களூருக்குப் போய் மாதங்கியைக் கண்டு பேசி, அவளை அழைச்சிக்கிட்டு வரப்போறேன்.''

''என்னைக் கவனிக்க ஒரு வேலைக்காரியா அவளை அழைச்சுக்கிட்டு வரப்போறியா? இங்க வந்து அப்படி அவதிப்பட அவளுக்குத் தலைவிதியா என்ன?''

''இல்லேம்மா! என் மனைவியா என்னோட வாழ வீட்டுக்கே திரும்பி வரும்படி கெஞ்சிக் கேட்கப் போறேன். நான் செஞ்ச தப்புக்கெல்லாம் பிராயச்சித்தமா அவளை அன்போட கவனிச்சுக்கொள்றேன்னு உறுதி சொல்லப் போறேன்.''

''காலம் கடந்த பிறகா?'' கஸ்தூரி அலுப்புடன் கேட்டாள்.

''அவ ஒரு நல்ல பெண். எனக்கு மனைவியாக் கிடைச்சது என் அதிருஷ்டம்னு இப்பத்தானம்மா புரிஞ்சு கொண்டேன். அவளை நான் ரொம்பக் கஷ்டப்படுத்தினதுக்கு வருத்தப்படறேனம்மா!''

''பரிதாபப்பட்டா மட்டும் போதாது ஹர்ஷா!''

''இல்லேம்மா. உண்மையிலேயே எனக்கு அவ மேலே விருப்பம் இருக்கு... காதல், கல்யாணத்துக்கு முந்தியும் வரலாம் பிந்தியும் வரலாம் இல்லியா?''

கஸ்தூரி மகனை நிதானமாகப் பார்த்தாள்.

''பெங்களூருக்குப் போய்ப் பார். பத்தாம் பசலியா நம்ம வீட்டுப் படியை மிதிச்ச மாதங்கி இல்லே அவள். வேலை செய்து தன்னைத் தானே காத்துக் கொள்ளும் திறமை கொண்ட ஒரு சுதந்திரமான பெண்... ஒரு சமயம் அவள் மனசில வேற யாரா....''

''அம்மா!'' ஹர்ஷன் தன்னை மறந்து உரத்த குரலில் கத்தினான். கண்ணும், மூக்கும் சிவந்து போயின.

அவனது உரிமை மனைவி மாதங்கி! அதை வேறு யாருக்கும் அவன் லேசில் விட்டுக் கொடுக்கப் போவதில்லை.... உரிமை உணர்வும், ஆத்திரமும் பொங்கும் குரலில்,

''நாளைக்குக் காலே பெங்களூர் புறப்படுகிறேன். எல்லாம் நல்லபடியாகட்டும்னு ஆசீர்வதியுங்க அம்மா!'' ஹர்ஷன் முதன் முதலாக, தாயாரின் முன் துயரமும் வெட்கமுமாகத் தலை குனிந்தான்! (தொடரும்)

---

# 'நாய் ஜாக்கிரதை'

சேலத்தில் சட்டசபைத் தலைவர் ராசாராம் வீட்டு வாசலில் 'நாய் ஜாக்கிரதை' என்று ஒரு அறிவிப்பு இருக்கிறது. வெளிக்கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றால் உட்கார்ந்த நிலையில் ஒரு நாய் நம்மை முறைக்கிறது. முதலில் பயந்த பிறகு சற்று உற்று நோக்கினால் பெருமூச்சு வருகிறது- அது பொம்மை.

பொம்மைதானே என்று அலட்சியமாக உள்ளே போய்விட முடியாது. வீட்டைச் சுற்றிக் கொண்டிருக்கும் நிஜமான நாயின்குரைப்பு குடலைச் சிலிர்க்க வைக்கும்!

-பிரபுசங்கர்

---

மாபெரும் லாரிகளை ஓட்டிச் செல்லும் சர்தார்ஜிக்குக் கொழுத்த பாலும் அபரிமிதமான தேயிலையும் கால்கிலோ சீனியும் சேர்த்த "சார் கண்டே சல்னேவாலா சாய்" (நாலு மணி நேரம் தாங்கக் கூடிய தேனீர்) மிகமிக விருப்பமான பானமாகும். அதில் அரை 'கப்' நம்மால் சாப்பிட முடியாது!

-மினுஸ்கி

# அசல் க்ளூகோன்-டி ®

# ஒன்றே ஒன்று தான் உண்டு.

## அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.




மட்டமான போலிகள் பலவற்றுள், க்ளாக்ஸோ நிறுவனத் தயாரிப்பான அசல் க்ளுகோன்-டி யினை நீங்கள் வாங்குவது முக்கியம். இல்லையெனில், போலிகள் மூலம் உங்கள் குடும்ப உடல்நலத்திற்கே பேராபத்து வரலாம். க்ளாக்ஸோ நிறுவனத்தின், முற்றிலும் நம்பிக்கைக்குரிய தயாரிப்பாகும் க்ளுகோன்-டி; வைட்டமின் $D_3$, ஃபாஸ்ஃபரஸ், கால்ஷியம் ஆகியன செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர் அடங்கியது. தங்களுக்குத் தேவையான போது சக்திபெற லட்சக் கணக்கானோர் அருந்துவது இது.

க்ளுகோன்-டி தயாரிப்போர், க்ளாக்ஸோ — பலவகை உணவுப் பண்டங்களுக்கும், உயிர்காக்கும் மருந்துகளுக்கும் புகழ்பெற்ற நிறுவனம். வாங்கும் க்ளுகோன்-டி பேக்கெட் அசல்தானா எனப் பார்த்து வாங்குங்கள்.

**க்ளூகோன்-டி ®**

**சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.**

**க்ளாக்ஸோ நிறுவனம் அளிக்கிறது.**

® டிரேடுமார்க்

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த
# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**
**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TM

# திங்கள் சந்தையில் ஒரு திருட்டு!

## இரணியல் ரவி

சப்-இன்ஸ்பெக்டருக்குத் தலை சுற்றியது.

'மேலே' இருந்து பத்தாவது தடவையாகத் தொலைபேசியில் 'தகவல்' கேட்டுச் செய்தி வந்தாயிற்று.

''என்ன மிஸ்டர்! எப்போ கேட்டாலும் விசாரிக்கிறேன்... விசாரிக்கிறேன்... என்னதான் விசாரித்துக் கிழிக்கிறீரோ?... பஸ் நிலையத்தில் நகையைப் பறிகொடுத்தவர் 'சிட்டிங்' எம். எல். ஏ. ஒருவரின் நெருங்கிய உறவினர்..... 'அந்த' ஆம்பிளையோ பொம்பிளையோதான் நகையைத் திருடியிருப்பாங்கன்னு 'அடிச்சு' சொல்றாரு!.... நீர் என்னடான்னா 'விசாரிக்கிறேன்! விசாரிக்கிறேன்' என்கிறீர்....''

சப்-இன்ஸ்பெக்டர் ஒரு தடவைக்கு இரு தடவையாக, போலீஸ் ஸ்டேஷன் வராந்தாவில் ஒரு ஓரமாக இருந்த அந்தக் 'குடும்ப'த்தைப் பார்த்தார்.

காலை நான்கு மணிக்குத் தகவல் வந்ததும் வராததுமாக ராதாகிருஷ்ணன் கோவிலையொட்டியிருக்கும் திங்கள் சந்தை பஸ் நிலையத்துக்கு இரண்டு கான்ஸ்டபிள்களுடன் விரைந்தார் அவர்.

திருச்செந்தூருக்குப் பஸ் ஏற வந்த ஒரு பெண்ணின் கழுத்துச் செயின் நைந்தோ பிய்ந்தோ அறுபட்டுக் கீழே விழுந்திருக்கிறது. கீழே விழுவதைப் பார்த்த அவள் கணவன் குனிந்து அதை எடுக்கு முன் செயின் மாயமாக மறைந்து போயிற்று.

பக்கத்தில் ஐந்து வயதுப் பையன் ஒருவனுடன் நின்ற தம்பதிகள் மீது அவர்களுக்குச் சந்தேகம்.

நகையைப் பறிகொடுத்தவர்களும், நகையைத் திருடியிருக்கக் கூடும் எனச் சந்தேகிக்கப்பட்டவர்களும் பார்க்க 'டீக்'காக இருந்தார்கள்.

பேச்சு முற்றிக் கைகலப்பில் முடியும் போல் இருந்தது.

நிலைமையைச் சமாளிக்க எல்லோரையும் ஸ்டேஷனுக்கு அழைத்து வந்தார் சப் இன்ஸ்பெக்டர்.

பஸ் நிலையத்தில் நடந்த கலாட்டா — போலீஸ்காரர்களின் மிடுக்கு — எல்லாவற்றையும் கண்டு, அந்தச் சிறுவன் 'ஓ'வென்று கத்தினான்.

அவன் தாய் அவனைச் சமாதானப்படுத்த எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. அவன் அழுகையை நிறுத்துவதாக இல்லை!

கடைசியாகப் பையிலிருந்து ஒரு 'ரொட்டி'யை எடுத்துக் கொடுத்ததும் அதை ஒரு வாய் கடித்துவிட்டு அமைதியானான் அவன்.

பிள்ளையின் கத்தல் ஓய்ந்ததும், கணவனையும் மனைவியையும் சப் இன்ஸ்பெக்டர் எப்படி எப்படியெல்லாமோ உருட்டி மிரட்டி விசாரித்துப் பார்த்தார்.

ஊஹூம். எந்தப் பயனும் இல்லை.

புகார் கொடுத்த பெரிய மனிதர் எட்டு ஒன்பது மணிவரை பொறுத்துப் பார்த்தார். பிறகு 'மேலே' சொல்லி 'ஆகவேண்டியதைப் பார்க்கிறேன்' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டு விட்டார்.

புகார் கொடுத்தவரோ 'சிட்டிங்' எம். எல். ஏ. ஒருவரின் உறவினர் என்கிறார்! திருட்டுக் குற்றம் சாட்டப்பட்ட தம்பதிகளோ வேறு ஒரு 'சிட்டிங்' எம்.எல்.ஏ.க்குத் தெரிந்தவர்கள் என்கிறார்கள்!

சப் இன்ஸ்பெக்டர் 'திரிசங்கு' சொர்க்கத்தில் தொங்குவது போல் படாத பாடு பட்டார். இந்த லட்சணத்தில் 'மேலே' யிருந்து மணிக்கு ஒரு கேள்வி வேறு! 'என்னாயிற்று? என்னாயிற்று?'

நிலைமை கட்டு மீறிப் போவது போல் தோன்றவே, 'த்ரீ நாட் நைன், டோன்ட் அலவ் தெம் கிவன் டு டேக் மீல்ஸ்! நான் செஷன்ஸுக்குப் போய்விட்டு வந்து விசாரிக்கிறேன்' என்று கூறிச் சென்றார்.

பத்மநாதபுரம் சப்-கோர்ட்டில் செஷன்ஸுக்குச் சென்று மாலை நான்கு மணிக்குத்



இரும்பியதும் இரும்பாததுமாக 'மேலே' இருந்து மீண்டும் தொலை பேசியில் அலறல்! 'என்னாயிற்று? என்னாயிற்று?'

இதுவரை பத்துப் பதினைந்து தடவைகள் அவர்களை விசாரித்தாயிற்று: 'நாங்கள் நிரபராதிகள்! நிரபராதிகள்!'

சப்-இன்ஸ்பெக்டருக்கே என்னவோபோல் இருந்தது.

அவர்கள் 'நிரபராதிகள்' என்றே அவருக்குத் தோன்றியது.

வருவது வரட்டும்!

'நீங்கள் போகலாம்! இது சம்பந்தமாக எப்போது அழைத்தாலும் ஸ்டேஷனுக்கு வர வேண்டும்!'

சோர்ந்த முகத்துடன் வெளியேறிய அவர்களைப் பார்த்து நீண்ட பெருமூச்சு விட்ட சப்-இன்ஸ்பெக்டர் அந்தச் சிறுவனின் கையில் காலையில் அவன் தாய் கொடுத்த அதே ரொட்டி இருக்கக் கண்டு திடுக்கிட்டார்.

பசியால் — இல்லை பயத்தால் — 'ஓ' என்று அலறிய சிறுவன், காலையில் இருந்து இதுவரை ரொட்டியைக் கையிலேயே வைக்கக் காரணமென்ன?

எங்கோ, எப்போதோ — கேரளாவில் கோட்டயத்திலோ, ஆந்திராவில் செகந்திராபாத்திலோ நடந்ததாக வந்த பத்திரிகைச் செய்தியோ, அகதா கிறிஸ்டியின் துப்பறியும் நாவலிலோ வாசித்த நினைவோ?

சப் இன்ஸ்பெக்டர், அவர்களை மீண்டும் ஸ்டேஷனுக்கு அழைத்து—

பையன் கையிலிருந்த ரொட்டியைப் பிளந்ததும்—

நான்கு சவரன் நகை பொத்தென்று தரையில் விழுந்தது!

'டீக்'கான டிரஸ்ஸுடன், நெரிசல் மிகுந்த பகுதிக்குச் செல்வதும், நகைகளைத் திருடுவதும், அகப்பட்டுக் கொண்டால் பசியால்— பயத்தால் அலறுவது போல — சிறுவனை அலறப் பழக்கி வைத்திருப்பதும் — திருடின்ற பொருட்களை ரொட்டி, பழம்போன்ற வைகளில் கண் இமைக்கும் நேரத்தில் வைத்துப் பிள்ளையிடம் தருவதும் -பாவமோ பழியோ என்று பிள்ளை அதைக் கையிலே வைத்திருப்பதும்.....

இத்யாதி, இத்யாதி....

கன்னியாகுமரி மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் திங்கள் சந்தையில் இரணியலில், தக்கலையில், தலக்குளத்தில், மணவையில் நடைபெற்ற திருட்டுக்கள் பலவற்றை இரணியல் சப் இன்ஸ்பெக்டர் துப்பறிந்த பெருமையை மறுநாள் பத்திரிகைகள் பறை சாற்றின.

* * *

# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

# மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர்—கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினாலும் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம்! தனி எவர்சில்வர் கிண்ணம்! உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்று ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளெட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்

**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது





# திரைப் பட வாழ்க்கையின் தொடக்க விழா!

**கோ**டம்பாக்கம் டிரஸ்ட்புரத்தில் ஒரு வீட்டுக்கு முன் சுமித்ரா சென்ற கார் நின்றது. நானும் சுமித்ராவும் இறங்கியவுடன் வீட்டின் சொந்தக்கார அம்மாள் எங்களை வரவேற்றார். சிறிது நேரம் எனக்கு அவர்கள் என்ன பேசினார்கள் என்றே புரியவில்லை. காரணம் இருவருமே மலையாளத்தில் சம்சாரிக்க.

எனது சங்கடத்தைப் பார்த்தவுடன் சிரித்துக்கொண்டே இருவரும் தமிழில் பேசத் தொடங்கினார்கள். ''முன்னே வராந்தாவா இருந்த இது இப்ப ரூமாயிடுத்தா?'' எனக் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் சுமித்ரா. ''உங்களுக்கு ஞாபகம் இருக்கும்னு நினைக்கிறேன் சலன். இந்த வீட்டில்தான் டைரக்டர் துரை வந்து 'அவளும் பெண் தானே' படத்துக்கு என்னை ஒப்பந்தம் செய்தார். இந்த வீட்டிலே பின்புறம் ஒரு மரம் இருக்கு. அந்த மரத்து மேலே சாய்ந்த மாதிரி முதன் முதலில் நீங்கதான் என்னை ஒரு ஸ்டில் எடுத்தீங்க நினைவிருக்கா?''

எனக்கு வெட்கமாகப் போய்விட்டது. 'நான் மறந்த ஒரு நிகழ்ச்சியை அவர் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறாரே' என ஆச்சரியப்படவும் செய்தேன். அடுத்த அறைக்குள் நுழைந்தோம். ''இந்த அறையில் உட்கார்ந்து கொண்டுதான் டைரக்டர் துரை என்னை ஒப்பந்தம் செய்தார். என் தமிழ்த் திரைப் பட வாழ்க்கை துவங்கியது. அதற்கு முன்பே என் முதல் படமான 'நிர்மால்யம்' (மலையாளம்) இங்கு நான் இருக்கும்போதுதான் திரையிடப்பட்டது. எனவே என்னைப் பொறுத்தவரை இந்த இடம் மிகவும் ராசியானது. என் திரைப் பட வாழ்க்கையின் தொடக்க விழா நடந்தது இங்குதான்!''

அடுத்து சுமித்ரா சென்றது ஒரு சிறிய ஹால். அதற்குள் நுழைந்ததுமே ஏதோ பழைய ஞாபகத்தில் சிரிக்க ஆரம்பித்தார் சுமித்ரா. ''எதற்குச் சிரிக்கிறீர்கள்?'' என்றேன். ''இப்போது கூட என் அம்மாவை இங்கு அழைத்து வந்தால் பெரிசா சிரிப்பார்கள்'' என்றார் சுமித்ரா. ''அன்று நடந்தது விபரீதமான விஷயம்தான் என்றாலும் அதன் நினைவு மட்டும் இன்று சிரிப்பைத் தான் ஏற்படுத்துகிறது.''



✖ வீட்டுச் சொந்தக்காரர்களுடன்.

✖ ''ஜன்னல் வழியே எட்டிப்பார்த்தால் வாசல் தெரியும்....''

சுமித்ரா அன்று நடந்த கதையைக் கூறினார்:

''ஒருநாள் என் அம்மா என்னிடம் இஸ்திரி பெட்டியை எடுத்து வரச் சொன்னார். பெட்டியை எடுத்து வந்து அம்மாவிடம் கொடுத்து விட்டுப் போய்விட்டேன். சற்று நேரத்தில் 'ஓ' என்ற அலறல். ஒருசில விநாடிகளுக்கு என்ன நடந்தது என்றே புரியவில்லை. மற்றொரு அறையிலிருந்த நான் அடித்துக்கட்டிக் கொண்டு ஓடிவந்தேன். அம்மா திருதிரு என விழித்துக் கொண்டிருந்தார். ''என்னம்மா என்னாச்சு?'' என நான் கேட்டும் பதிலே இல்லை. தொட்டு உலுக்கினேன். ''ஆ!'' என்று அதிர்ச்சி கலந்து எழுந்தாள். இஸ்திரி பெட்டி ஷாக் அடித்ததிலே அவள் அதிர்ஷ்டவசமாய்த் தூக்கி எறியப்பட்டிருக்கிறாள். மின்சாரம் சிலசமயம் இப்படித் தள்ளிவிடும்; சில சமயம் இழுத்தும்விடும்! தெய்வாதீனமாகப் பிழைத்த அவள் பிரமை நீங்கியதும் படபடத்தாள். நான் ஆறுதல் சொன்னேன். ஆனால் பின்னால் அந்தச் சம்பவத்தை நினைத்து நினைத்துச் சிரிப்போம்!''

இப்படிக் கூறிக்கொண்டே அடுத்த அறைக்குள் சென்றார் சுமித்ரா. ''இதோ இதுதான் அன்று என் பிரத்தியேக அறையாக இருந்தது. இந்த அறையில் ஒரு விசேஷம் என்னவென்றால் வாசலில் யார் வருகிறார்கள் என்று ஜன்னல் வழியே பார்க்கலாம்! கேட் சத்தம் கேட்டாலே எட்டிப் பார்த்து விடுவேன். தெரிந்தவர் என்றால் நானே போய் வரவேற்பேன். தெரியாதவர் அல்லது வேண்டாதவர் என்றால் நான் இல்லை என்று சொல்லச் சொல்லிவிடுவேன்!''



✖ ''எட்டவில்லை என்பதால் அன்று ஒருநாள் ஸ்டூலைப் போட்டு ஏறி அது தடுமாறிக் காலை வாரிவிட....''




✖ ''அம்மாவுக்கு ஷாக் அடித்தது இங்கே தான்!''

இதற்கு நேர் எதிரே சமையலறை. அதைப் பார்த்ததும் சுமித்ராவுக்குத் தான் விழுந்து அடிபட்டுக்கொண்ட ஞாபகம்வந்துவிட்டது.

''ஒரு நாள் அப்பா அம்மா எல்லோரும் வெளியே போயிருந்தார்கள். விருந்தினர்கள் வந்துவிட்டார்கள். எனக்குக் கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை. அவர்களுக்கு என்ன கொடுப்பது? காப்பியா? டீயா? தின்பண்டங்கள் ஏதாவது இருந்தால் தட்டில் வைத்துக் கொடுக்கலாமே என்று தேட ஆரம்பித்தேன். மேல் ஷெல்பிலுள்ள டப்பாக்களை எடுத்து ஆராய விரும்பினேன். கை எட்டவில்லை. ஸ்டூலைப் போட்டுக்கொண்டு ஏறி நின்றேன். ஒரு டின்னைப் பார்த்துவிட்டுத் திரும்ப வைத்தபோது ஸ்டூல் தடுமாறிக் காலை வாரி விட்டுவிட்டது. நான் கீழே விழுந்தேன். நல்ல வேளை, டப்பா கீழே விழுந்து ஏகச் சத்தத்தைக் கிளப்பி விருந்தினர்களை அழைத்துவிடவில்லை. ஒன்றும் நடக்காதது போலச் சென்று விருந்தினர்களை எப்படியோ சமாளித்தேன். இன்றும் என் வலது காலில் ஒரு சிறு தழும்பு உள்ளது. அது இச் சம்பவத்தின்போது பட்ட காயத்தின் தழும்பு தான்!'' என்றார் சுமித்ரா.

பேட்டி: ''சலன்''

படங்கள்: ஏ.வி. பாஸ்கர்

# கடுகு பதில்கள்!




⌘ ஜி. கிரிஜா அய்யர், நெகமம்

கே: எல்லாருக்கும் பரிசு கொடுக்கிறீர்களே, நீங்கள் பரிசு பெற்றதுண்டா?

ப: என்னைப் பார்த்தே அறியாத தாங்கள் இப்படி ஒரு கேள்வியை அக்கறையுடன் கேட்கிறீர்களே, அதைவிடப் பெரிய பரிசு ஏது?

⌘ பி. கே. தேவதாஸ், தஞ்சாவூர்

கே: என் வாழ்க்கை ஒரே சோக மயமாக இருக்கிறது. என்ன செய்யலாம்?

ப: உங்கள் பெயர் தேவதாஸாக இருப்பது காரணமோ என்னவோ! பெயரை மாற்றிப் பாருங்கள்.

⌘ எஸ். ரமேஷ் பிரியா, மதுரை 16

கே: பெரும்பாலும் (குறட்டை விடாமல்) உண்மைகள் உறங்குவது ஏன்?

ப: உண்மைகள் ஓயாமல் சத்தம் போட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. உறங்கும் போதும் அவை குறட்டை விடுகின்றன. ஆனால் நமக்குத்தான் காதில் விழுவதில்லை. நாம் கேட்கக் கூடியதைவிட அதிக அளவு அலைவரிசையில் உண்மைகள் குரல் கொடுப்பதாலும் இருக்கும்; அல்லது நாம் சில சமயம் சௌகரியமாக "செவிடாகி" விடுவதாலும் இருக்கும்.

⌘ சி. அரவிந்தா, சிறுமயன் குடி

கே: வேலை நிறுத்தம் போன்ற போராட்டங்களில் அர்ச்சகர்கள் ஈடுபடுவதில்லை. இருந்தும் அவர்களுக்கு ஒழுங்கான ஊதியமே வருவதில்லையே ஏன்?

ப: 'சப்தம் போடுகிற சக்கரத்துக்குத்தான் கிரீஸ் போடுகிறார்கள்' என்று ஒரு பழமொழியிருக்கிறது. அது பழைய மொழியானாலும் இன்றைய தினம்தான் அது மிகவும் பொருத்தமானதாகவும் உண்மையானதாகவும் அமைகிறது. இன்று நம் பொது வாழ்வில் பல போராட்டங்கள் அன்றாடம் நடக்கிறதன் காரணம் என்ன? இப்படிச் செய்கிறவர்களின் குறைதான் உடனடியாகக் கவனிக்கப்படுகின்றன. ஒரு விதத்தில் இதுவும் 'ஹைஜாக்' மாதிரி தான். போராட்டம் எதுவும் அர்ச்சகர்கள் நடத்தாததால்தான் அவர்களை யாரும் கவனிப்பதில்லையோ என்னவோ!

⌘ வெ. பாலசந்திரன், குரோம்பேட்டை

கே: அரசியல் பற்றி நீங்கள் கமெண்ட் அடிக்காததன் காரணம் என்ன?

ப: அதைப் பற்றிக் கருத்துக்கள் கூறப் பல விற்பன்னர்கள் இருப்பதால், நான் வெறும் 'பன்'னராக இருக்க முயல்கிறேன்.

⌘ ட்விங்கிள் கண்ணன், திருச்சி-1

கே: சாதனை என்பது என்ன?

ப: மற்றவர்களால் எளிதில் செய்ய முடியாததைச் செய்வது சாதனை. இமயமலை மீது ஏறுவதும் சாதனை; கண்ணை மூடிக் கொண்டு ஊசியில் நூல்கோப்பதும் சாதனை. சில சாதனைகள் சமூகமும் தனி மனிதனும் மேம்பாடடைய உதவும். வேறு சில வெறும் சாதனைகளாக மட்டும் இருக்கும். ஒரு வேடிக்கையான சாதனை நினைவுக்கு வருகிறது. அமெரிக்காவின் ஜனாதிபதியாக இருந்த ஜேம்ஸ் அப்ராம் கார்பீல்ட் இடது கையாலும் எழுதுவார்; வலது கையாலும் எழுதுவார். அதுவும் ஒரே சமயத்தில்! அதுமட்டுமல்ல, இடது கையால் கிரீக் பாஷையிலும் வலது



கையால் லத்தீன் பாஷையிலும் ஒரே சமயம் எழுதுவாராம். இதுவும் சாதனை தானே.

◘ எல். ஆர். விஜயகுமார், பட்டினபாக்கம்

கே: உங்கள் படத்தை வெளியிட்டால் குழந்தைகளைப் பயமுறுத்த உதவுமே. செய்வார்களா?

ப: சொஸைடி ஃபார் தி பிரவென்ஷன் ஆஃப் க்ரூயல்டி டு சில்ட்ரன்'காரர்கள் 'கடுகு' மேல் நடவடிக்கை எடுத்து விடுவார்களே!

⌘ ஜி. ராமசுப்ரமணியன், பொம்மாமணி

கே: மாண்புமிகு கடுகு அவர்களே! அழகான முகமும் நடிக்கும் திறமையும் கொண்டுள்ளேன். நடிப்பதைப் பற்றித் தங்கள் கருத்து என்ன?

ப: இந்தக் காலத்தில் அழகையும் திறமையையும் யார் பார்க்கிறார்கள்? எனக்குக்கூடத்தான் எல்லாம் இருக்கிறது. என்ன பயன்! இந்தப் படாதிபதிகள் 'லே' என்று இருக்கும் கமலஹாசன் பின்னால்தானே போகிறார்கள்! (தாங்க்ஸ் ஃபார் தி 'மாண்புமிகு')

பரிசு பெறுபவர்:

சி. அரவிந்தா, சிறுமயன்குடி 621706

# பாஸ்கரனை ஒதுக்கியது ஏன்?



இந்திய அணியின் தலைவராக எத்தனையோ போட்டிகளில் கலந்து கொண்டவர் பாஸ்கரன். மாஸ்கோ ஒலிம்பிக்கில் தங்க மெடல் வாங்கிக் கொடுத்தவர் பாஸ்கரன். இந்தியாவிலேயே விளையாட்டு வீரர்களுக்கு அதிகபட்சமான விருதாக அளிக்கப்படும் 'அர்ஜுனா' பரிசைப் பெற்றவர் பாஸ்கரன். பாஸ்கரன்தான் தென்னிந்திய காப்டனாக இருப்பார் என்று எல்லோரும் எதிர்பார்த்தது நியாயம்தானே? ஆனால், பரிதாபமான விஷயம் என்னவென்றால் காப்டனாக வருவார் என்று எதிர்பார்க்கப்பட்டவர் 16 பேர் கொண்ட அணியில் ஒருவராகக்கூடத் தேர்ந்தெடுக்கப்படாததுதான். இந்த 16 பேர் அணியை அறிவித்தவர் இந்திய ஹாக்கி சம்மேளனத்தின் உபதலைவர் வி. பி. பாஸ்கரன் என்பவர். இவரும் தென்னிந்திய அணியைத் தேர்வு செய்யும் பொறுப்பில் உள்ள ராஜகோபாலும், தேர்ந்தெடுக்கப்பட்ட அணியினருக்கும் மற்ற வீரர்களுக்கும் அளிக்கப்பட்ட விருந்தில் கலந்துகொள்ளவில்லை. அதுவே அவர்களது குற்றஉணர்வைக் காட்டுகிறது என்கிறார்கள் ஹாக்கி ரசிகர்கள். பாஸ்கரனின் பொஸிஷனில் விளையாட யுவராஜ் என்பவரைத் தேர்ந்தெடுத்துள்ளார்கள். இந்த யுவராஜ் நாலு வருடங்கள் கர்நாடகா அணிக்கே விளையாடாதவர்.

பாஸ்கரனைத் தென்னிந்திய அணியில் தேர்ந்தெடுக்காதது குறித்து ஹாக்கி ரசிகர்களிடம் பெருத்த ஆட்சேபம் உண்டாகியது. பிரதமருக்குத் தந்திகள் பறந்தன. கர்நாடகா எம். பி.யான எப். எம். கான் கண்டித்து அறிக்கை வெளியிட்டார். இவ்வளவுக்குப் பிறகும் சம்மேளனத்தின் தலைவர் மகாஜன் பாஸ்கரனைத் தேர்ந்தெடுக்காததற்குக் காரணங்களைச் சொல்கிறார்: "பாஸ்கரனின் ஆட்டம் கடைசி 15 நிமிடத்தில் மிகவும் மந்தமாக இருக்கிறது. மேலும் அவருக்கு வயதாகி விட்டது. கடுமையான பயிற்சிகளை அவரால் மேற்கொள்ள முடியாது."

வயதாகி விட்டதாம்! என்ன பேச்சு இது? பாஸ்கரனை விட வயதான ஓம்கார் சிங்கும் கர்ஜித் சிங்கும் இருக்கும்போது பாஸ்கரன் அணியில் இருக்கக் கூடாதா? இந்தக் காரணங்கள் எல்லாம் அவரை அணியிலிருந்து தூக்கியடித்த பின் தோன்றிய காரணங்களே தவிர உண்மையான காரணங்கள் இல்லை.

தென்னிந்திய அணியில் பாஸ்கரன் இடம் பெறுவாரேயானால், அவர்தான் தலைவராக இருப்பார். அப்படி தென்னிந்திய அணியின் தலைவராக அவர் இருக்கும் பட்சத்தில், அடுத்து வரும் உலகக் கோப்பைக்கான பந்தயங்களிலும், ஆசிய விளையாட்டுப் போட்டிகளிலும் இந்திய அணிக்கு அவரே தலைவராக இருந்திருப்பார். இந்த நிலை ஏற்படுவதைச் சகிக்காத சிலர்தான் தென்னிந்திய அணியிலேயே அவர் இடம் பெறுவதைத் தடுத்துவிட்டிருக்கின்றனர். கர்ஜித் சிங் இந்திய அணியின் தலைவராவதை மத்திய அமைச்சர் ஒருவர் விரும்புகிறாராம். இந்த கர்ஜித் சிங், இரண்டு முறை கோச்சிங் கேம்பிலிருந்து ஓடிப்போனவர்.

மகாஜனுக்கு முன் ஹாக்கி சம்மேளனத்தின் தலைவராக இருந்தவர் திரு எம். ஏ. எம். ராமசாமி. ஆறு மாதத்துக்கு முன்பிருந்தே திரு ராமசாமி, பாஸ்கரனிடம், "உன்னை அணியிலிருந்து விலக்கி விடுவார்கள்" என்று சொன்னாராம். அவர் சொன்னது போலவே நடந்திருக்கிறது.

இப்போது ஐந்து மண்டலங்களில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட 80 வீரர்களில் 44 வீரர்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இதிலிருந்து 16 பேர் கொண்ட தேசிய அணி தேர்ந்தெடுக்கப்படும். மிகவும் வேதனையான விஷயம் என்னவென்றால், இந்த 44 பேரில் தமிழ் நாட்டிலிருந்து ஒருவர்கூட இல்லை! மேலும் மாஸ்கோ ஒலிம்பிக்கில் ஆடின மூன்று பேர்கள் நீக்கப்பட்டுள்ளார்கள்.

மிகவும் கேவலமான இன்னொரு விஷயம் என்னவென்றால், பாஸ்கரனைத் தேர்ந்தெடுக்காதது குறித்து தமிழ்நாடு ஹாக்கி சங்கத்தைச் சேர்ந்தவர்கள் மிகவும் சந்தோஷமாக இருப்பதுதான். "பாஸ்கரன் தமிழக அணிக்கு விளையாடுவதில்லை; தென்னிந்திய ரயில்வே அணிக்குத்தானே விளையாடுகிறார்; அப்படி இருக்க அவருக்கு நாங்கள் ஏன் பரிந்து பேச வேண்டும்" என்கிறார்களாம்!

இதுபற்றி பாஸ்கரனிடத்தில் கேட்டதில் "நானெங்கு தவறு செய்திருக்கிறேன் என்பது தெரியவில்லை. என்னைத் தேர்ந்தெடுக்க முடியாத நிலை ஏற்படுவதை முன்பே தெரிவித்திருந்தார்களேயானால், நானே கண்ணியமாக விலகிக் கொண்டிருப்பேன். இப்போது வேண்டுமென்றே என்னை அவமரியாதை செய்திருக்கிறார்கள். இதனால் நான் துளிக்கூட வருத்தப்படவில்லை. எனக்கு எங்கள் ரயில்வே அணி இருக்கிறது. அதில் ஆடியே என் திறமையை நிரூபிப்பேன்" என்கிறார்.

- ப்ரியன்

# வஸந்த்! வஸந்த்!

சுஜாதா

## 24. 'ரிஸ்க் எடுக்காதே!'

வஸந்த் தலையைச் சொறிந்து கொண்டான்; கலைத்துக் கொண்டான். கன்னத்தில் மச்சம் ஒட்டிக் கொண்டு, பொய் மீசை பொருத்திக் கொண்டு கண்ணாடி பார்த்து ''பயமா இருக்கு'' என்றான். விலகினான். இனியா ''பர்ஃபெக்ட்! சார்மினார் விளம்பரத்தில வர ஆசாமி மாதிரி இருக்கே!'' என்றாள்.

''பாஸ், எதுக்கு இந்த வேஷம்னு சொல்லித் தொலைச்சிங்கன்னா உபகாரமா இருக்கும்''

''உதர நிமித்தம் பஹுகிருத வேஷம்.''

''சம்ஸ்க்ருதத்தில விளையாடறீங்க! என்னது பகவத் கீதையா?''

''பஜகோவிந்தம்.''

''உக்கலுக்குப்போய் ஏதாவது பஜனை பண்ணணுமா?''

''கணேஷ்! நாம எப்ப உக்கல் போகப் போறோம்?''



''காலைல சார்'' என்றான் கணேஷ். பேராசிரியர் இன்னும் சிந்தனை வசப்பட்டுத்தான் இருந்தார்.

''அதுக்காக இப்பவே வேஷம் போட்டுக்கணுமா பாஸ்?''

''இல்லை வஸந்த். நீ இன்னிக்கே போயிடறே.''

''சரி. இதெல்லாம் எதுக்கு பாஸ்? அவங்க என்ன செய்யறாங்க?''

''எங்க போயிருக்கும் அந்த மாடைக் காசெல்லாம்?''

''அடாடாடா! ஸார்! கொஞ்ச நேரம் இந்த மாடையை உள்ள விடாமப் பார்த்துக் கறுங்களா? ஏற்கனவே சிண்டைப் பிடிச்சிண்டு தலை மொட்டையா இருக்கு. இனியா! அப்பாவைக் கூட்டிண்டு போய் ஒரு தம்ளர் ஜலம் மோர் வாங்கித் தா.''

''அப்ப நான் வரட்டுமா கணேஷ். நாளைக்குக் காலைல கட்டாயம்?''

''கட்டாயம்! நீங்க இல்லாம நான் கிளம்ப மாட்டேன் ஸார்!''

''நாளைக்கு ஒண்ணில்லை ஒண்ணு தீர்ந்துடறும். நான் தான் தப்பு பண்ணிட்டேனு, ஸொறு வேறயா?''

''எல்லாம் நாளைக்குப் பார்த்துறலாம் ஸார்.''

''இனியா வரியா?''

''பை வஸந்த்!''

''பை இனியா! உயிரோட இருந்தா நாளைக்குப் பார்க்கலாம்.''

இனியா கிளம்பும் சமயத்தில் அந்தப் பெண் ''எக்ஸ்க்யூஸ் மீ''யுடன் உள்ளே நுழைந்தாள்.

இனியாவும் அந்தக் கண்ணாடிப் பெண்ணும் சந்தித்துக் கொண்ட பார்வையில் மின்பொறிகள் சிற்சில பறந்தன. லைப்ரரிப் பெண்தான். இப்போது வேறு மாதிரி இருந்தாள். பனியன் 'டோண்ட் லுக்' என்றது.

''எஸ்? யார் வேணும்?'' என்றாள் இனியா விரோதக் குரலுடன்.

''மிஸ்டர் வஸந்த் இருக்காரா?''

''இதோ சாட்சாத்!''

''நீங்களா!'' அவள் நிமிர்ந்து பார்த்தபோது அவள் மார்பு விம்மியது.

''ஓ எக்ஸ்க்யூஸ் மீ! ஒரு நிமிஷம்!'' வஸந்த் மீசையை நீக்கிவிட்டு ''இப்ப பாருங்க'' என்றான்.

லைப்ரரி கைகொட்டிக் குதித்து சிரித்து, ''ஓ! வஸ்ஸந்த்! யூ ஆர் நாட்டி'' என்றாள்.

''உங்களை லைப்ரரியில பார்த்திருக்கிறதா ஞா'' என்றான்.

''அதுக்குள்ள மறந்துட்டீங்களா? நீங்க தான் கோவிந்தான்னு பெயர் கொடுத்து ஏமாத்திட்டு வந்துட்டா கண்டு பிடிக்க முடியாதுன்னு நினைச்சீங்களா?''

''எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''

''கெஸ் பண்ணுங்க பார்க்கலாம்.''

''என்னது?''

''கெஸ். ஜீ யு இ எஸ் எஸ்! கிஸ் இல்லை.''

''அதானே பார்த்தேன். காதில வேற மாதிரி விழுந்தது.''

''உங்க ரிஸ்ட் பாகை விட்டுட்டுப் போயிட்டீங்க. அதில உங்க கார்டு இருந்தது. அட்ரஸ் இருந்தது. இந்தாங்க உங்க கைப் பை. இந்தாங்க உங்க போட்டோ ஸ்டட் காப்பி.'' இடுப்போடு ரொம்ப ஒட்டினாற்போல் பாண்ட் அணிந்திருந்த அவள் வஸந்துக்குத் தேவைக்கு அதிகமாக அருகில் வாசனையாக வந்து பையைக் கொடுத்துவிட்டு, ''கன்னத்தில் என்ன கருப்பா?'' என்று வஸந்தின் பச்சத்தை அழித்தாள்.

வஸந்த் ஒரு கணம் இனியாவைப் பார்த்தான். அவள் கண்களில் பளபளவென்று கத்திகள் தெரிந்தன. ''பைதவே திஸ் இஸ் இனியா! திஸ் இஸ்.... உங்க பேர் என்ன சொன்னீங்க? மிஸஸ் ராகவன்னு ரீல் விட்டீங்க....''

இனியா காத்திராமல், ''அப்பா வாங்க போகலாம்'' என்றாள்.

வெளியே காரில் கோபக் கதவு சாத்தப்பட்டதைக் கவனிக்காமல் வஸந்த், ''அப்ப என்னத்தேடிக் கண்டு பிடிச்சுட்டீங்க?'' என்றான்.

''நான் வரட்டுமா? ஸீ யூ ஸம் டைம்'' என்று அவள் குதித்துக் கொண்டு கிளம்ப வஸந்த் ''கொஞ்சம் இருங்க. வாசல் வரைக்கும் கொண்டு விடறேன்''. அவளுடன் சென்று அவளுடைய வெஸ்பாவை உதைத்துக் கிளப்பிக் கொடுத்து ஸீட்டைத் தட்டிக்கொடுத்து வழியனுப்புவதை, புறப்பட்டுக் கொண்டிருந்த இனியா



பார்த்தாள். உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

திரும்ப அறைக்குள் வந்ததும், "யாரு இது புது சிநேகிதம்?" என்றான் கணேஷ்.

"லைப்ரரிலே பார்த்தேன் பாஸ். அப்ப லாரி கட்டியிருந்ததாலே சரியாத் தெரியலே. என்ன மாதிரி சாஸி பார்த்தீங்களா?"

"அடப் போடா! இனியா உன்னைப் பார்த்த பார்வையைக் கவனிச்சியா?"

"சேச்சே! இன்னி தப்பா எடுத்துக்காது! அது வேற பாஸ்! அது காவியம், கவிதை!"

"பின்ன இது?"

"இது சும்மா பொய்மை பார்க்கறது."

"உருப்படவே மாட்டே..."

"கேஸுக்கு வாங்க பாஸ். என்ன கண்டு பிடிச்சீங்க? அதைச் சொல்லவே இல்லியே."

"வஸந்த் நீ கொண்டுவந்த ரசாயன ஆராய்ச்சிக் கட்டுரை ராஜராஜன் கிணத்தில இருக்கிற தண்ணியை அலசி எழுதியிருக்கிற கட்டுரை. அதில இருக்கு சூட்சுமம்."

"என்ன அது? நானும்தான் படிச்சேன். ஒரு அட்சரம் புரியலியே!"

கணேஷ் அந்தப் புத்தகத்தைப் பிரித்து, குறிப்பிட்டிருந்த பக்கத்திலிருந்து படித்தான்:

The Chemical properties of the water in this well render it admirably suited for pre-process pulp treatment. Moreover in Block Printing Process with this water treatment halftone blocks and Litho graphic stones and other surface deposition systems can be made to look like those printed from engraved intaglio plates.

"இப்ப மட்டும் புரிஞ்சுதா?"

"வஸந்த்! இரண்டாயிரத்து ஐநூறு வருஷத்துக்கு முந்தி ஸன் ட்ஸு-ன்னு ஒரு சீனக்காரர் என்ன சொன்னார் தெரியுமா? 'உன் எதிரியை அறிந்து கொண்டு உன்னையும் அறிந்து கொண்டாயானால் நீ நூறு யுத்தங்களுக்கும் பயப்பட வேண்டியதில்லை'ன்னு"

"ஸன் ட்ஸு! இப்ப இதில எங்கே வர்றார்?"

"எதிரியைத் தெரிஞ்சுகிட்டுட்டேன். இனிப் பயமில்லே."

"என்ன தெரிஞ்சுகிட்டீங்க?"

"வஸந்த் இன்டாக்லியோ பிளேட்டுங்கறது எதுக்கு யூஸ் பண்ணுவாங்க தெரியுமா?"

"எதுக்கு?"

கணேஷ் பையிலிருந்து எடுத்துக் காட்டி, "இதுக்கு" என்றான்.

வஸந்த் சற்று நேரத் தயக்கத்துக்குப் பின் திடீரென்று பிரகாசமாகி "மை காட்! இப்ப புரியுது பாஸ்!" என்றான்.

"பத்துக்கு முப்பது. பத்துக்கு நாப்பதை விடச் சிறப்பா இருக்கிறது புரியுதா?"

"புரியுது! பளிங்கு மாதிரி! பஸ் ஸ்டாண்டில நடந்தது, சரித்திர சம்பந்தமில்லாதவங்க ரா.ரா.வுக்கு நாயா அலைஞ்சது, கத்திக் குத்து, அடிதடி எல்லாம் கத்தி சொருகினப்பல அப்படியே வந்து விழுது."

"இப்ப எதுக்காக முதல்ல உன்னை அங்க அனுப்பறேன்னு தெரியுதா? கோஷ்டியாப் போனா சந்தேகப்படுவாங்கல்ல?"

"தெரியுது பாஸ்! நீங்க இல்லாடி! கவலையே படாதீங்க. இடத்தைக் கண்டு பிடிச்சுட்டுத்தான் ம. கா. அதானே வேணும் உங்களுக்கு?"

"அதான்! இப்ப எல்லாச் சம்பவங்களுக்கும் இருக்கிற இணைப்பு புரியுதா?"

"அய்யோ! சொல்லாதீங்க. அவ்வளவு மரமண்டை இல்லை நான்."

"வஸந்த்! எதுக்கும் ஜாக்கிரதையாவே இருந்துக்க. அநாவசியமா ரிஸ்க் எதும் எடுக்காதே. சந்தேகமா இருந்தா நான் வர்ற வரைக்கும் காத்துக்கிட்டு இரு. சரிதானே?"

"நோ ப்ராப்ளம்!"

"நான் ராஜேந்திரனுக்கு போன் பண்ணி ரீ-இன்போர்ஸ்மெண்டோட நாளைக்கு வந்து சேர்றேன்."

"அப்ப நான் உக்கலின் பக்கல் சென்று வரவா?"

"வா! பெஸ்ட் ஆஃப் லக்."

வஸந்த் மறுபடி உக்கலுக்கு வந்தபோது மாலை ஐந்து மணி. பஸ் நிலையத்தில் கொஞ்ச நேரம் திரிந்தான். அந்தப் பெட்டிக் கடைக்காரன் மார்பு சட்டைப் பித்தான் திறந்து அதில் ஒரு புலி நகம் தொங்க, காட்டுத்தனமாக கிராப் வைத்துக் கொண்டு பக்கவாட்டமாகப் பார்த்தான். வஸந்த் அங்கே சென்று சிகரெட் பற்றவைத்துக் கொண்டான். மச்ச

---

## யாருக்குத் தெரியும்?

எனது ஆசைகளை
எழுதலாம் என்றால்
எனது பாஷைகள்
ஏளனம் செய்கின்றன.
எனது திறமையை
எழுதலாம் என்றால்,
எனது வறுமை
இளக்காரம் செய்கிறது.
எனது சரித்திரத்தை
எழுதலாம் என்றால்,
எனது தரித்திரம்
எகத்தாளம் செய்கிறது.
எனது பொறுமையை
எழுதலாம்; ஆனால்,
எனது அருமை
எவருக்குத் தெரியும்?

-அனுராதா கட்டபொம்மன்



மும் மீசையும் கையில் சிறிய அளவு வி.ஐ.பி. பெட்டியுமாக நின்றான். கடையில் தொங்கிக் கொண்டிருந்த பத்திரிகைகளில் ஏராளத்தில் முன் பக்கம் பின் குத்தியிருந்த வகைகளைப் பிரித்துத் தலையைச் சாய்த்துக் கொண்டு படித்தான்.

சோப்பைத் தேடு...
பிறகு அவன் எனக்கும்....
மாதிரி செய்தாள்....
கொருவர் வாய் மூலம்....
ரம்பித்தோம் நான்கைந்து....
நேரடியான உடலுற....

''என்னங்க? உங்க டேஸ்ட்டுக்கு புஸ்தகம் வேணுமா?'' என்று கடைக்குள்ளிருந்து ''பக்கத்து வீட்டுப் பருவச் சிட்டு'' ''இன்ப மயக்கம்'', ''மலபார் தேங்காய்'', ''இரவும் உறவும்'' இவைகளை எடுத்துப் போட்டான்.

'' 'வாழு வாழவிடு' இருக்கா?''

''யாரு சின்மயானந்தாவுங்களா?''

''இல்லேப்பா. சரோஜா தேவி!''

''இல்லேங்க.''

''அது படிச்சுப் பாரு. டாப்பா இருக்கும்''

''ஐயா வெளியூருங்களா?''

''ஆமாங்க. வியாபார விஷயமா வந்தேன்.''

''என்ன வியாபாரம்?''

''ஸாம்பிள்!''

கடைக்காரன் இங்கே அங்கே பார்த்து விட்டு, ''வாங்கறீங்களா?'' என்றான்.

''ஆமாம்.''

''பணம் கொண்டு வந்திருக்கிங்களா?''

''இருக்கு. மாலேப் பாக்கணும். போன தடவை ஏமாந்துட்டேன். எல்லாம் வேஸ்ட் ஆயிடுச்சு. எரிச்சுட்டேன்.''

''இந்த முறை சிறப்பாவே போட்டிருக்காங்க.''

''கேள்விப்பட்டேன்.''

''என்ன ரேட்டு?''

''முப்பதுதான் மாமூலே.''

''முப்பதுக்கு வரமாட்டாங்க.''

''மாலேப் பார்த்துட்டா மேலே போலாம்னு எங்க முதலாளி சொன்னரு.''

''எந்த ஊருங்க?''

''கோயமுத்தூர்தான்.''

''பாக்கறீங்களா?''

''இப்ப வேண்டாங்க. இருட்டட்டும். போலீஸ் கயவாணிப் பயங்க பிடிச்சுட்டா பேர் கெட்டுப் போயிரும்.''

''அப்ப எத்தினி மணிக்கு வரிங்க?''

''ஏழு மணிக்கு கூட்டிப் போறீங்களா?''

''ஆகா. அதுக்கென்ன?''

''வரட்டுமா?''

'' 'மலபார் தேங்காய்' வேணுமா படிக்கிறீங்களா?''

''படிச்சு என்னய்யா பிரயோசனம்?''

''பாக்கணும்னுக்கூட சௌகரியம் பண்ணிக் கொடுக்கலாம்.''

''வந்த வேலையை முதல்ல கவனிச்சுரலாமா?''

''உங்க பேரு?''

''ஏங்க! நம்ம வியாபாரத்தில பேர் சொல்வாங்களா? நான் உன் பேர் கேட்டேனா?''

''ஏழு மணிக்கு வாங்க.''



அவன்: ''பர்ஸில் என் அட்ரஸைச் செருகி வைச்சிருந்தது தப்பாப் போச்சு!''
இவன்: ''ஏன்டா?''
அவன்: ''காலையில் எனக்கு வந்த மணியார்டரின் அடியில் 'தரித்திரம் பிடிச்ச பன்னாடைப் பயலே.. சென்ற வாரம் 23-ஆம் பஸ்ஸில் நான் பிக்பாக்கெட் செய்த உன் பர்ஸிலிருந்த பதினைந்து பைசாவை இத்துடன் அனுப்பியுள்ளேன், பெற்றுக்கொள்'னு எழுதியிருக்கு!''
- உ. ராஜாஜி

வஸந்த் அந்த இடத்தை விட்டு விலகி மெல்ல நடந்தான். போலீஸ் பக்கமே போகக் கூடாது. பார்த்துக் கொண்டு இருப்பார்கள். சந்தேகத்துக்கு இடமே கூடாது. அவர்கள் பணத்தைக் கேட்டால்? காட்டச் சொன்னால்?....

அதை அப்போது சந்திக்கலாம். முதலில் அந்த இடத்துக்குப் போயாக வேண்டும். டீ சாப்பிட்டான். பெஞ்சியில் உட்கார்ந்து கொண்டு மற்றொரு சிகரெட் பற்ற வைத்துக்கொண்டு அதை நிதானமாக ஊதினான்.

ஒரு பையன் வந்து ''கடைக்காரர் கிட்டப் பேசிக்கிட்டு இருந்தது நீங்கதானே?'' என்று கேட்க,

''ஆமா. நாந்தான். ஏன்?''

''கூட்டி வரச் சொன்னாங்க'' என்று அவன் விறுவிறுவென்று நடக்க, வஸந்த் அவன் பின் சென்றான்.

பஸ் ஸ்டாண்டிலிருந்து பிரிந்து சற்றுத் தூரம் நடந்த பின் பையன் நெல் வயல்கள் மேல் பாய்ந்து வரப்பில் விரைந்தான். வஸந்த் ஓட்டமும் நடையுமாகத் தொடர ஒரு மாந்தோப்பில் நுழைந்து பண்ணை முற்றம்போல் இருந்த, சாணி மெழுகப்பட்ட இடத்தைக் கடந்து, ஒரு மண்டபத்தை வளைந்து, சின்னதாக ஷெட்டு போல் இருந்த மறைவான இடத்துக்கு வந்து அதன் வாசலில் பையன் நிற்க, ''உள்ளே போங்க. நான் இனிமேக்க வரக்கூடாது'' என்றான்.

வஸந்த் அந்த மரக் கதவைத் திறக்க அது கிரீச்சிட்டது. உள்ளே வைக்கோல் பரவி மாட்டு மூத்திர நாற்றமடித்தது. ஷெட்டுப் போலத்தான் இருந்தது. ஒற்றை மாட்டு வண்டிக் கூடு சாய்ந்திருந்தது. எதிர் சுவரில் ஒரு கதவு தெரிந்தது. வஸந்த் அதை நோக்கிச் சென்றான். 'ஜாக்கிரதை ரிஸ்க் எடுக்காதே!' கணேஷ் எச்சரிக்கை காதில் ஒலித்தது. என்ன, ரிஸ்க் பார்த்துடலாம் என்று ஆவல் மேலிட அந்தக் கதவைத் தட்டினான்.

சற்று நேரத்தில் அது திறக்க உள்ளே இருட்டாக இருந்தது.

''வாங்க வஸந்த்'' என்றது ஒரு குரல். சட்டென்று அத்தனை விளக்குகளும் உயிர் பெற்றன.

(தொடரும்)





ரசிகமணி ரசித்த மணிகள்

# கேட்பவர்களை நோக்கியே!

மீ.ப. சோமு

டி.கே.சி. எப்போது பார்த்தாலும் கம்ப ராமாயணத்திலேயே மூழ்கிக் கிடப்பார், மற்ற நூல்களையே அவர் கவனிப்பதில்லை என்பதாகச் சில அறிஞர் பெருமக்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இது சரியில்லை.

கேட்டுக் கொண்டிருப்பவர்களின் மனநிலை, பக்குவம், புரிந்து கொள்ளும் ஆற்றல் ஆகியவற்றுக்குத் தகுந்தபடியே மணங்களைப் பார்த்துப் பேசுகிறவர் டி.கே.சி! அந்தந்தச் சூழலுக்கு ஏற்ப, நாடோடிப் பாடல்களிலிருந்து திருமந்திரம் வரை பல நூல்களிலிருந்தும் கவிப் பண்புள்ள அழகழகான பாடல்களை எடுத்துச் சொல்லுவார். அவர் எந்த நூலைப் படித்தாலும் பாடல்களுக்கு அருகிலேயே சரிச் சின்னம்(✓) அல்லது சுன்னம் (o) போட்டிருப்பார், பேனாவைக் கொண்டு! சரிச் சின்னம் நல்ல பாட்டுக்கு அடையாளம். வட்டம் போட்டு நடுவிலே புள்ளி வைத்தார் என்றால், அல்லது கழித்தல் சின்னம் (–) போட்டார் என்றால், மட்டமான பாடல் என்று அவருடைய மதிப்பீடு! இந்த அடையாளம் இல்லாத புத்தகமே அவருடைய நூலகத்தில் (கிட்டத்தட்ட ஏழாயிரம் நூல்கள் வைத்திருந்தார்) கிடையாது. திருமந்திரம் நூலில் மட்டும் 'சுன்னம்' என்கிற வட்டம் இராது! கழித்தல் குறியும் இராது! அதாவது அந்த நூலில் மட்டும் எந்தப் பாடலையும் அவர் சோடை என்று கருதவில்லை. வேறு எந்த நூலுக்கும் இல்லாத இந்த மகிமையை அவருடைய திருமந்திரப் புத்தகத்திலே பார்க்கலாம்! சில திருமந்திரப் பாடல்களில் கேள்விக் குறி போட்டிருப்பார். அதாவது பாடல் மட்டமாகப் படவில்லை, ஆனால் அதிலுள்ள தத்துவ நுட்பம் தமக்குப் புரியவில்லை என்பதற்குரிய அடையாளம் இது! மற்றப்படி அத்தனை பாடல்களையும் அவர் உயர்ந்த கவிப் பண்புள்ளவை என்று மதித்தார். அவற்றில் எல்லாருக்கும் புரியக் கூடிய சிக்கல் இல்லாத எளிய பாடல்களை மட்டும் அடிக்கடி எடுத்துச் சொல்லுவார்.

இளமை நாட்களில் பல ஆண்டுகள் அவருடனேயே இருந்திருக்கிறேன். தாமிரவருணி நதியின் இக்கரையில் மீனாட்சிபுரத்தில் எங்கள் வீடு. அக்கரையில் வண்ணார் பேட்டையில் டி.கே.சி. வீடு. ஆற்றைக் கடப்பதற்குக் குறுக்கே நடந்தே சென்று விடலாம். அத்தனை எளிது. 1940க்குப்பிறகு, நான் திருச்சி ஆ.இ.ரே.யில் சேர்ந்த பின்பு, ரசிகமணியும் திருக்குற்றாலத்துக்குப் போய் விடவே, சந்திப்புக் குறைந்தது. ஆண்டுக்கு ஒரு தடவை அல்லது இரண்டு தடவைதான் நான் விடுமுறையில் குற்றாலம் சென்று தங்க முடிந்தது. அப்படி நான் அவருடன் தங்கியிருந்தபோதெல்லாம், கம்பர் வருவதோடு கூடப் பெரும்பாலும் சங்க இலக்கியப் பாடல்களும், திருமூலரும், அப்பர் சுவாமிகளும், மாணிக்கவாசகரும், பழைய இலக்கண நூல்களிலுள்ள தொன்மையான மேற்கோள்ச் செய்யுள்களும் ரசிகமணியிடமிருந்து புறப்பட்டு வரும்! தமிழர் பண்பாடு பற்றிய அரும் பெரும் உண்மைகளும், பல கவின் கலை நுட்பங்களும், மேற்கு நாட்டு விஞ்ஞான வித்தைகளும் எழுந்து எழுந்து பவனி வந்த மயமாக இருக்கும்! இருட்டி விட்டது என்றால் ஐந்தருவிச் சாலையில் வந்து நின்று கொண்டு ஆகாயக் காட்சிகளைக் காட்டியவாறு விண்மீன்களையும் கோள் இயக்கங்களையும் சிறு பிள்ளைக்குக் கூடப் புரிகிற விதத்தில் விளக்கத் தொடங்கி விடுவார் டி.கே.சி! எப்படிப்பட்ட ஆனந்த அனுபவங்கள் அவை! சில சமயங்களில் ராஜாஜியும் குற்றாலத்தில் எங்களோடு வந்து தங்கிவிடுவார்! அறிவுப் பண்பாடும் இதயப் பண்பாடும் இணைந்து பொழுது போவதே தெரியாது!

டி.கே.சி. அடிக்கடி ஒன்று சொல்லுவார்: ''கன்றைப் பார்த்ததும் பசுவுக்கு மடி சுரப்பது போலத்தான் எனக்கும் எதிரே இருக்கிற ரசிகரைப் பொறுத்தே அவ்வப்போது பாடல்களோ கலையுண்மைகளோ திடீர் திடீரென்று நினைவுக்கு வருகின்றன!'' என்று! இது பற்றி அவர் எனக்கு எழுதியுள்ள ஒரு கடிதம் 28–11–52 இல்:

''நீ இங்கு வந்து சில நாள்த் தங்கினாலும் பல நாள் அனுபவங்கள் வந்து ஊடாடிப் போகின்றன. பேசுவதற்கு ஏதேதோ விஷ

யங்கள் பண்பாடு சம்பந்தமாகவும் இலக்கியம் சம்பந்தமாகவும் வருகின்றன. நீ இல்லையானால் அவை வரமாட்டா! எங்கேயோ மனசின் மூலையில் அவை துருஏறித்தான் கிடக்கும்! இற்றும் போய்விடும் தான், நாளடைவில்! இந்த மாதிரி விஷயங்களை அடிக்கடி மனசுக்குக் கொண்டு வந்து விளக்கிப் பீடங்களில் வைக்க வேண்டியது அவசியம்! தமிழ் நாடு முழுவதுமே செய்து கொண்டிருக்க வேண்டிய காரியம்! ஆனால் யாரும் செய்யவில்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. இந்தப் பராமுகம்காரணமாகநமதுதமிழகத்தில் எத்தனையோ நூல்கள், பாடல்கள் உண்மைகள் (சையன்ஸ்) எல்லாம் வழக்கிலிருந்து அப்படியே ஒழிந்து போய் விட்டன! நஷ்டம், பெரிய நஷ்டம்!''

இவ்வாறு எழுதுகிறார் ரசிகமணி. தமிழ் மக்கள் பழைய நூல்கள் பலவற்றையும், அறிவியல் ஏடுகளையும் அனுபவிக்க ஆள் இல்லாத காரணத்தால் மறந்து இழந்து விட்டார்கள். பல சுவடிகள் படிப்பார் இல்லாமல் மூலைக்குப் போய் கறையானுக்குப் போய், நெருப்புக்கும், தண்ணீருக்குமே இரையாகிவிட்ட சோகக் கதைதான் நமக்குத் தெரியுமே!

இலக்கியமும் அறிவியலும் மட்டுந்தானா? நமது சங்கீதமும் அதே கதிக்கு உள்ளாகி விட்டதை ரசிகமணி ஆழ்ந்த

---

# வா, இந்தப் பக்கம்!

அடிப்படை: பட்டிக்காட்டுப் பெண்ணை நாகரிக யுவதியாக மாற்ற நினைக்கும் 'மை ஃபேர் லேடி' கதைதான். சம்பவங்கள், சந்தர்ப்பச் சூழல்கள் வேறே. அது ஷா: இது மௌலி.

ஹேமமாலினி மாதிரி (அல்லது ஹேமமாலினியே) தனக்கு ஒருத்தி மனைவியாக வரவேண்டும் என்று மனக் கோட்டை கட்டிக் கொண்டிருக்கும் வாலிபனுக்குச் சரியான கட்டுப்பெட்டி வந்து வாய்க்கிறாள். அதுவும் எப்படி? சிநேகிதர்களை 'விஷ்' செய்து வரவேற்கும்படிசொன்னால் கீழே விழுந்துவிழுந்து நமஸ்காரம் செய்கிற 'டைப்'. பக்கத்து வீட்டுப் பைத்தியத்தின் மூலம் (அது தனிக் கதை. கதையுடன் ஒட்டாதது மட்டுமல்ல; நம்ப முடியாமலும் உள்ளது) மனம் மாற, சிநேகிதர்களுடன் சகஜமாகப் பழக ஆரம்பிக்கிறாள். மாடர்னாக டிரெஸ் செய்து கொள்ளுகிறாள். இப்போது மனைவி 'தவறி' விடுவாளோ என்ற பயம் கணவனுக்கு வந்து விடுகிறது! ஓட்டுக் கேட்டு அவன் மனம் திருந்துகிற மாதிரி முடிகிறது...

தங்கை பரீட்சைக்குப் போகும்போது 'கோழி முட்டை, வாத்து முட்டை' என்று கத்திக்கொண்டே வியாபாரி செல்வது: தீவிர உணவுப் பிரியரான தந்தை ஏதாவது 'ஜோக்' அடிப்பது: திரைப்படத்தின் முடிவு இப்படிப் பல இடங்களில் நாடக வாடையே வீசுகிறது.

படத்தின் முக்கிய பிளஸ் பாய்ண்ட் பிரதாப். அந்த அப்பாவித்தனமான முகத்தை வைத்துக் கொண்டு சக்கைப் போடு போடுகிறார். இன்னொரு பிரதான அம்சம் இசை. ஷியாமுக்கு ஒரு ஷொட்டு.

ஜெயதேவி பைத்திய வேஷம் போடுவதற்கான காரணத்தை இன்னும் வலுவாக அமைத்திருக்கலாம்.

பிரதாப்பின் மனைவியாக வரும் உமா கட்டுப்பெட்டியிலிருந்து நாகரிகமாக மாறிய விதத்தைச் சிறாகச் செய்துள்ளார். ஆ... வெற்றிலை குதப்பிக் கொண்டு ஜாடையாகவே பேசும் சம்பந்தியை மறக்கலாமோ! நல்ல தமாஷ்.

மௌலிக்கு ஒரு கேள்வி: அடிப்படையான கதை இருக்கிறது. வசனங்களும் பளிச் பளிச். இருந்தும் ஏன் விரசத்தின் எல்லைக்குப் போக வேண்டும்? வா, இந்தப் பக்கம் என்று அவரை நாகரிகத்தின்பால் அழைக்கிறோம்.

—தமயந்தி



வருத்தத்தோடு சொல்லுவார். பாராமுகத்தினால் எத்தனையோ அற்புதமான தமிழ்க் கீர்த்தனைகளும், பதங்களும், வழக்கத்திலிருந்து மறைந்து, தமிழில் ஏது சங்கீதம் என்றே கேட்கத் தொடங்கினார்கள் அல்லவா? ஒரு கடிதத்தில் டி.கே.சி. எழுதுகிறார்:

''அஞ்ஞானம் என்பது அநாதியான சர்வ வியாபகமான தத்துவம்! ஒரு அஞ்ஞானத்துக்கும் இதர அஞ்ஞானம் எல்லாவற்றுக்கும் அபூர்வமான ''ஸஹிருதயத்வம்'' உண்டாய் விடுகிறது. இயல்புதான். தமிழில் பாட்டே இல்லை என்று ஒரு பிரகஸ்பதி சொல்ல வேண்டியது. அவ்வளவுதான். இதர பிரகஸ்பதிகள் எல்லாம் பல்லவி வைத்துவிடும்! யோசனையை அந்தப் பிரகஸ்பதிகளின் தலைக்குள் வைக்க மறந்துவிட்டான் பிரமன்! அவ்வளவுதான்! என்னிடம் கேட்டால் தமிழ் ஒன்றுதான் சங்கீதத்துக்கு வாய்ப்பான பாஷை, உண்மையான பாட்டும் தமிழிலேதான் இருக்கிறது என்று சொல்லுவேன். சொல்லி என்ன செய்ய! தமிழ் நாடு ஒரே செவிட்டு நாடாக அல்லவா இருக்கிறது!''

இன்னொரு நண்பருக்கு எழுதிய கடிதத்தில் இன்னொரு பகுதியைப் பாருங்கள்:

''உலகம் எங்குமே சங்கீதம் இருக்கிறது. அது மாத்திரம் அல்ல. அந்தச் சங்கீதத்தில் பாவமுள்ள சங்கீதம் என்றும் பாவமற்ற சங்கீதம் என்றும் இருக்கின்றன.

தமிழ் நாட்டுக்கு வருவோமானால் இங்கேயும் சங்கீதத்தை இரண்டு விதமாகப் பிரிக்க வேண்டும். பாவமான சங்கீதம், பாவமற்ற சங்கீதம் என்பதாக! தெலுங்கு சங்கீதத்திலும் அப்படியேதான். தெலுங்கு சாகித்தியத்தை உணர்ச்சியோடும் பக்தியோடும் பாடும்போது அது பாவ சங்கீதம். வெறும் விளையாட்டாக, உணர்ச்சி யில்லாமல் பாடும்போது சாமான்யம் என்று சொல்லிவிட வேண்டியதுதான்! ஏதோ காதின் ஜவ்வுக்குச் சுகமாய் இருக்கலாம். அவ்வளவுதான். Tympanic என்றுபெயர் இட்டு அழைக்கலாம்!

தெலுங்குக்குச் சொன்னது தமிழுக்கும் அப்படியே பொருந்தும்!

ராகம் பாடும்போது தமிழருக்கும் தெலுங்கருக்கும் பொதுத்தான். இருவரும் அனுபவிக்கலாம். அதில் பாஷை கலப்பில்லாததால் இருவருக்கும் பொது என்கிறோம்.

ராகம் பாடுவது என்பது கெண்டியை வைத்துக் கொண்டு கன்னம்புக் கோலம் போடுவது போன்றது. கைலாகவத்தைக் கண்டு அனுபவிக்கிறோம். வளைவும், நெளிவும் அந்த லாகவத்தைக் காட்டுகின்றன. அது போல சாரீரத்தின் லாகவத்தைக் கண்டு ராகத்தின் நயத்தை அனுபவிக்கிறோம்.

ஆனால் சாகித்தியத்துக்கு வரும்போது, பாவத்தை எதிர்பார்க்கிறோம். உள்ளிருக்கும் உணர்ச்சி வேகம் சங்கீதத்துக்கு ரூபம் கொடுக்கிறது. கவியைப் பற்றிச் சொல்லும் போது Metre forging argument (argument =emotional reality) என்று மில்டன் சொன்னதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் சங்கீதத்தில் பாவ ரூபம் என்று ஒன்று இருக்கிறதென்றும், அதுவே சங்கீதத்துக்கு லட்சியம் என்றும் தெரியவரும்.









நான் சொல்வதெல்லாம் சங்கீதம் பாவ சங்கீதமாகவே இருக்க வேண்டும். (அப்படியானால்தான் மக்களிடம் போய்ச் சேரும்) தெலுங்கர்கள் பாவத்தை உணர வேண்டும் என்றால், தெலுங்கு பாஷையில்தான் சாகித்தியமும் இருக்க வேண்டும். தமிழில் இருந்தால் விஷயம் புரியாது. உணர்ச்சியை உணர முடியாது. பாவத்தைக் காண முடியாது!

கேட்பவர்களுக்காகவே சங்கீதம்! கேட்பவர்களுக்காகவே இலக்கியம். அனுபவிக்கிறவர்களுக்காகவே கலைகள் எல்லாம்!

டி.கே.சி. கவியும் சங்கீதமும் ஒன்று என்று எண்ணிக் கொண்டிருக்கிறார் என்று (பத்திரிகைகளில்) எழுதுவார்கள்! எனக்கோ சர்க்கரைக்கும் கடலை மாவுக்கும் வித்தியாசம் தெரியும்! கடலை மாவை மாத்திரம் சாப்பிட்டுக் கொண்டிருக்க முடியாது! சர்க்கரையைத் தனியாகச் சாப்பிடவும் முடியாது! ஆனால் லட்டு செய்து கொடுத்தால் சாப்பிட முடியும்.

மானச உலகத்திலுள்ள ஆனந்தத்தை (மக்களுக்காக) ஜட உலகத்துக்குக் கொண்டு வருவதுதான் கலை. கல்வி, கலை விஷயங்களில் தாகூர் தெளிவான உண்மை ஒன்றை வெளியிட்டிருக்கிறார். அதாவது, பள்ளிக்கூடங்களிலும், யூனிவர்ஸிடிகளிலும் மூளையை வளர்க்கிற காரியந்தான் நடக்கிறது. அதற்குப் பதிலாக இதயத்தை வளர்த்தால் அளவில்லாதபடி கல்வி, கலை எல்லாம் வளரும் என்பதாக! இதில் சந்தேகமே இல்லை!''

சின்ன மத்தளம் கொட்டும் ஓசை கேட்டுப் பாத்திரம் கழுவிக் கொண்டிருந்த பாலி, விழுந்தடித்துக் கொண்டு ஓடி, ஜன்னலை எட்டிப் பார்த்தாள்.

அதோ இருக்கிறான் அந்த வித்தைக்காரன்! நேற்றும் முந்தாநாளும் தனது வீரச் செயல்களால் பிரமிக்கச் செய்து, அவள் மனத்தில் இடம்பெற்றுவிட்ட சாகஸக்காரன்.

பாலி இதற்கு முன்பும் பல சர்க்கஸ்காரர்களைப் பார்த்ததுண்டு. இருந்தாலும் இவன் கிங்கரன்ம்மா! வளர்ந்த வாட்டசாட்டமான உடம்போடு, நீளமான கையில் கூர்மையான பட்டாக் கத்தியைப் பிடித்துக் கொண்டு நின்றான். அவனுக்கு முன்னால் துணி விரித்து, இரண்டு வயதுக் குழந்தையைப் படுக்கப் போட்டார்கள். அதன் வயிற்றின் மேல் ஒரு வாழைப் பழத்தை வைத்தார்கள்.



பாலி இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் பட்டாக் கத்தியைச் சுழற்றிக் கொண்டே பாய்ந்தான். அது என்ன வேகமோ... மாயமோ... மந்திரமோ குறியோ கலையோ! குனிந்து ஸ்...ஸ்... சதக்! ஒரு சின்ன 'ஷ்க்' சப்தம் கூட இல்லை. பழம் இரண்டு துண்டுகளாகத் தெறித்து விழுந்தது. குழந்தை சிரித்துக் கொண்டிருந்தது.

அவன் பழத் துண்டுகளை எடுத்து ஒன்றைக் குழந்தைக்கு ஊட்டிவிட்டு, மற்றொன்றைத் தன் வாயில் போட்டுக் கொண்டான்.

'ஹேய்.!' என்று தெருவில் ஆரவாரம் கிளம்பிற்று. சின்னப் பையன்கள் சொல்லாமலே ஜோராய்க் கை தட்டினார்கள்.

இது முதல் நாள் நிகழ்ச்சி.

இரண்டாவது நாள்:

திடீரென்று சின்ன மத்தளம் அதிர்ந்தது. பாலி கண்களைத் திறந்தாள். பெருத்த மகிழ்ச்சி ஆரவாரம், கைதட்டல்களுக்கிடையில், அந்தக் கம்பத்தின் உச்சியில் நின்று கொண்டு யாவருக்கும் சலாம் பண்ணிக் கொண்டிருந்தான். நிம்மதியுடன் அவளைப் பார்த்துப் புன்சிரிப்புச் சிந்தியபோது, அவனுடைய பாராட்டுதலை மனமுவந்து ஏற்றுக் கொள்ளும் பாவனையில், பாலிக்கு மாத்திரம் ஒரு பிரத்தியேக சலாம்!

மறுநாள் விடிந்ததிலிருந்தே அம்மாவின் ரோதனைகள் வேதனையூட்டின.

''பாலி.... பாலி... அடி, பாலி! எங்கேடி போனாய்?''

''இதோ வந்தேம்மா!''

''பாலி! கோழியைக் கூடையில் அடை. அதன் தலையைக் கிள்ளிக் குழம்பு வைக்க! நேற்று அடுத்த வீட்டுத் தோட்டத்தில் முட்டை இட்டிருக்கிறது!''

அறிவில்லாத கோழி! தோழி போல, உன்னை மடியில் வைத்து தவிடு போட்டு, வெங்காயம் போட்டு, பூனையை விரட்டி, பருந்தை விரட்டித் தூங்க வைத்தால்.... முட்டையை மட்டும் நீ எங்கள் வீட்டில் போடாதே? உன் கழுத்தைத் திருகிக் கறி வைக்க!

கோழியைத் தேடி பாலி கொல்லைப் பக்கம் போனாள். அது அங்கில்லை. வாசலுக்கு வந்தாள். வீட்டுக் கூரையில் பார்த்தாள். அது தெருக் கடைசியிலிருந்த மைதானத்தில் நான்கைந்து சேவல்கள் புடைசூழக் குப்பை மேட்டைப் பரிபாலனம் பண்ணிக் கொண்டிருந்தது. கம்பளத்தின் மேல் நடந்து செல்கிற மாதிரி பாலி சத்தம் செய்யாமல் அதன் பின்னால் போய் வால்புறத்தைப் பிடித்தாள் கபக்கென்று.

சிக்கிவிடுமா அத்தனை சீக்கிரம்?

பாலி அதைத் துரத்திக் கொண்டே சென்றபோது... அவனோடு மோதிக்கொண்டாள். 'ஆ...' என்று நெற்றியைப் பிடித்துக் கொண்டு, ''ஏ, கோழித் திருடி! பார்த்தால் சின்னப் பெண்ணாகத் தெரிகிறாய்! மோதினால் முரட்டுத்தனமாக மோதுகிறாயே!'' என்றான்.

''அது எங்கள் வீட்டுக் கோழி. முட்டை போடும்.''

''நீ முட்டை போடுவாயோ?''

''....க்கும்!''

''குட்டி போடுவாய். முட்டை தின்று குட்டி போடுவாய்!''

மல் வேட்டி கட்டி, வெள்ளை சில்க் ஜிப்பா போட்டு, மீசையை நறுக்கி, தலை வாரி அவன் அழகாக இருந்தான். ''உன் பெயரென்ன?''

''பாலி.''

''பாலி! வேறெந்த ஜோலி உண்டா? இன்று முழுக்க எனக்கு ஓய்வு. வந்தால் என்னோடு பேசிக் கொண்டிருக்கலாம்.''

''சரி.''

''நீ சரியென்றுதானே சொன்னாய்?''

''சரிதான்.''

''நான் சரியாகக் கேட்கவில்லையோ வென நினைத்தேன்.''

''செவிடா?''

''...க்கும்! நான் சிங்கத்தின் வாயில் தலையைக் கொடுத்திருக்கிறேன். புலி முதுகில் சவாரி செய்திருக்கிறேன். யானைகளைப் பழக்கியிருக்கிறேன். ஆனால் பெண்களென்றால் பயம். வலியப் போய் நம் விருப்பத்தை வெளியிட்டால் அவமானப்படுத்தி விடுவார்கள். வெறுப்பைக் கக்கத் தயங்க மாட்டார்கள்.''

''பாலி அப்படியல்ல.''

''தெரிகிறதே. அனுபவத்தில்.''

பாலி அவனை ஒட்டி நின்று, அவனோடு இணைந்து நடந்தாள். அவன் முகத்தில் நிலவிய களிப்பும், அவள் முகத்தில் தோன்றிய சிரிப்பும், வழியில் போகிற — வருகிறவர்களையெல்லாம் அவர்கள் பக்கம் திருப்பி, ''இதோ காதல் ஜோடி!'' என்று பேச வைத்தது.

''உனக்கு எது வேண்டுமோ கேள் ஊடுக்கா வாங்கித் தரச் சித்தமாக இருக்கிறான்!''

''ஊடுக்கா?''

''அது என் பெயர்.''

பாலி, ''ஊடுக்கா... ஊடுக்கா!'' என்று சொல்லிப் பார்த்துக் கொண்டாள். ''இது வரை நான் கேள்விப்படாத விநோதமான பெயர்!''

''உன்னைப் போல், நானும் ஒரு சின்ன, சிங்காரச் சித்திரப் பெண்ணைச் சந்தித்த தில்லை.''

ஆயினும்... ஊடுக்கா! அந்தப் பெயரைச் சொல்லும்போதே அவளுக்குச் சிரிப்பு வந்தது. அவனோ, பெயரில் என்ன இருக்கிறது? என்றான்.

மஞ்சளாய் அரளிப் பூக்கள் மலர்ந்து உதிர்ந்து கிடந்த பாதையில் நடந்தார்கள். செடியிலிருந்த ஒரு பூவைப் பறித்து, அவள் தலையில் சூட்டப் போனான்.

''ஊடுக்கா! பெண்கள் இதைச் சூடுவதில்லை.''

உடனே ஊடுக்கா அதைத் தன் காதில் செருகிக் கொண்டான்.

ஒரு தோட்டத்தில் சிவப்பும் மஞ்சளும், பச்சையும் கலந்த நிறங்களில் மாதுளம் பழங்கள் பழுத்திருந்தன. நின்றவாறே இரண்டு பழங்களைப் பறித்தான்.

''தோட்டக்காரன் பார்த்தால்...?''

''ஊடுக்கா ஆண் சிங்கம். பிற எந்த ஆணுக்கும் அஞ்ச மாட்டான். இங்கேயே உட்கார்ந்து சாப்பிடுவோம். வரட்டும், பார்க்கட்டும், தைரியமிருந்தால்கேட்கட்டும், துணிவிருந்தால் மோதட்டும் அந்தத் தோட்டக்காரன்....இன்று பகல் சினிமா உண்டு. போகலாமா பாலி?''

''போகலாம்.''

தன் கைவிரல்களை அவள் கைவிரல்களோடு கோத்துக் கொண்டான். சாக்கடை நீர் ஓடிக் கொண்டிருந்த ஓடை குறுக்கிட்டது. அதைக் கடந்து செல்ல ஒரு மரப் பாலம்.

பாலி பாலத்தில் ஏறினாள். அவன் நின்றான்.

''என்ன தயக்கம்?''

''அந்த வழி பெண்களுக்கு! பெண்கள் மாதிரி சேலை கட்டிய ஆண்களுக்கு. ஒரே தாவல். நான் அந்தப் பக்கம் போய்விடுவேன்'' என்றான் ஊடுக்கா வீராப்போடு.



# ஊடுக்கா

டி. நமசிவாயம்

"ஹுடுக்கா! சாக்கடை. தவறி விழுந்தால்....''

''இந்த ஆறடிப் பாலத்தைத் தாண்ட முடியாவிட்டால் வெட்கம்! ஹுடுக்கா இருபதடி தாண்டுவான். அறுபதடி உயரத்தில் கயிற்றில் நடப்பான். பதினாறடி வேங்கையை அடக்குவான்.''

''வேண்டாம் ஹுடுக்கா.''

''ச்சு...!'' என்று அலட்சியமாக அவளைத் தள்ளினான். அதே அலட்சியத்தோடு எகிறித் தாவினான்.

தொபுக்கென்று சப்தம். பிறகு அவனைக் காணவில்லை. சாக்கடை நீர் அமுக்கிவிட்டது. அவன் விழுந்த இடத்தில் வட்ட வட்ட நீர்க் குமிழிகள் தோன்றி வெடித்து மறைந்தன.

''ஹுடுக்கா... ஓ. ஹுடுக்கா!''

சிறிது நேரத்துக்குப் பின் அவன் தலை மட்டும் தெரிந்தது. சாக்கடையில் மூங்கிக் குளித்தவன் போல் எழுந்தான். வேட்டி, ஜிப்பா, தலை, முகம், உடம்பு எல்லாம் சாக்கடை. சற்று முன் வெள்ளை வெளேறென்று காட்சியளித்தவன், வேஷம் போட்டவன் மாதிரி, கறுப்பாக, அவலட்சணமாக இருந்தான்.

பாலியினால் சிரிப்பை அடக்க முடியவில்லை.

அவன் கை-கால்களை, வேட்டி-ஜிப்பாவை உதறிக்கொண்டு அவள் எதிரே வந்தான்.

''ஹுடுக்கா! கருங்குரங்கு போல் இருக்கிறாய்!'' என்று சிரித்தாள்.

''சிரிப்பை நிறுத்தடி, சின்னக் குட்டி!''

''ஹுடுக்கா! நான் சொன்னதைக் கேட்டிருந்தால்....'' சிரிப்பு இன்னும் நிற்கவில்லை. ''ஹுடுக்கா இப்போது எப்படி இருக்கிறாய் தெரியுமா? சர்க்கஸ் கோமாளி மாதிரி! குழந்தைகள் பார்த்தார்களோ தொலைந்தது.''

''அத்தனை இகழ்ச்சியா உனக்கு? என் முகத்திலே விழிக்காதே! போ... போ... சீ! நான் போகிறேன், உன்னைத் தலைமுழுகி விட்டு!''

''நான் சிரித்தது தவறென்றால் மன்னித்து விடு.''

''விலகிப்போ, பெண் சைத்தானே!''

பாலி அறியாச் சிறுபெண். ஹுடுக்காவின் பாதங்களில் விழுந்து மன்னிப்புவேண்டினாள்.

''உனக்கும் எனக்கும் இனி உறவென்ன? உன் ஆயுளில் என்னைப் பார்க்க மாட்டாய்!'' அவன் வேறு திசையில் நடந்தான்.

''ஹுடுக்கா!'' — அவள் அழுதாள்.

அவன் நின்று திரும்பினான். அவன் பார்த்துக் கொண்டிருந்தபோதே காலில் அணிந்திருந்த செருப்பைக் கழற்றி வீசினான். ஓரிடத்தில் — போக முடியாதபடி —கருவேல முட்களையும் உடைந்த கண்ணாடித் துண்டுகளையும் நெடுகப் பரப்பி யிருந்தனர். அந்த வழியாக ஓடினாள். அவள் மெல்லிய இரு பாதங்களிலும் முட்கள் ஆழமாகக் குத்தின. ரத்தம் கொட்டியது. அழுது கொண்டே ஓடினாள். ரத்தம் பீறிட்டு வழியும் பாதங்களுடன். கண்ணாடித் துண்டுகள் பாய்ந்தன. ஒரு காலைத் தூக்கிக்கொண்டே நொண்டி நொண்டி ஓடினாள். ஓட ஓட முட்கள் மேலும் தைத்தன. அந்த இடத்திலேயே உட்கார்ந்து விட்டாள்.

''ஹுடுக்கா! உன்னைப் பார்த்துச் சிரித்தேன். அதற்குத் தண்டனை அனுபவிக்கிறேன். என் ரத்தம் வடியும் பாதங்களைப் பார்! கண்ணீர் சிந்துவாய்! ஓ... ஹுடுக்கா!'' அவள் கதறினாள்.

அன்றைய சம்பவத்தின் பின், எத்தனையோ ஆண்டுகள் கடந்து போயின. பாலி தினம் எத்தனை எத்தனையோ பெயர்களைக் கேள்விப்படுகிறாள்.

ராமன், கிருஷ்ணன், கோவிந்தன்...

முகமது, அப்துல்லா, இப்ராஹிம்...

பெயரில் என்ன இருக்கிறது?

அப்படியா சொன்னாய்?

ஹுடுக்கா!

அவன் பாலியைத் தேடி வரவேயில்லை; வரவே மாட்டான்! அவன் முகம், தோற்றம் எல்லாம் மறந்து விடும். அவன் பெயர் மட்டும் மறக்கவே மறக்காது.

ஹுடுக்கா! அந்தப் பெயர் பாலியைச் சிரிக்க வைக்கும்! அழவைக்கும்! ஆத்திரப்பட வைக்கும்! அனுதாபப்பட வைக்கும்! மகிழ்ச்சி என்பது மாபெரும் மலையென்றால், அதன் சிகரத்தில் ஏற்றி வைத்து, மகுடம் சூட்டும்! துன்பமென்பது மீள முடியாப் பாதாளமென்றால், அங்கே ஆழமாய்ப் புதைத்துக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொல்லும்.

என்ன செய்தாலும் — அவன் நூறாண்டு வாழப்போவதில்லை! வாழ்ந்தாலும் — பாலி அந்தப் பெயரை மறக்கப் போவதேயில்லை!

## என் மாமா
### தங்கை மகன் திரு சி. ஆர். சேஷன்



தகப்பனாரிடமும் தாயாரிடமும் அபரிமிதமான பாசத்தைச் சொரிந்தவர் என் மாமா. வெளியூர் போனாலும் கச்சேரிகள் இல்லாத நாளில் ஓட்டமாக ஒரு நடை வந்து பெற்றோரைப் பார்த்துவிட்டுப் போவார்.

ஊருக்குப் புறப்பட்டுப் போகும்போதெல்லாம், தன் தாயாரிடம் ஒரு முறை சொல்லிக் கொண்டால் திருப்தியாகாத மாதிரி, திரும்பத் திரும்ப வந்து சொல்லிக் கொண்டு போவார். அவர் தாயார் அதிகம் பேசமாட்டார். நோய் காரணமாக அசதியிருந்து இருந்தார். அதிகம் பேசினால் உடம்புக்கு ஏதேனும் வந்துவிடுமோ என்று பயந்து கொண்டிருந்தாலும், மணி அய்யர் ஊரில் வீட்டுக்கு வரும்பொழுது தம்முடைய நேரமெல்லாம் அவருடன் இருப்பதற்கு வசதியாக ஒதுக்கி வைத்துக் கொள்வார். புறப்படுகிற சமயத்தில் எங்கே தாயாரால் பேச முடியாமல் போய்விடுமோ என்பதற்காக, ''அம்மா, நீ இப்போதே பேச வேண்டியதெல்லாம் பேசிவிடு! புறப்படுகிற சமயத்தில் உன்னால் பேச முடியுமோ முடியாதோ! அப்போது வெறுமனே கையை உயர்த்தி அசைத்தால் போதும்!'' என்பார்.

சகுனத்தில் தமக்கு நம்பிக்கை இல்லாவிட்டாலும், தகப்பனார் அந்த விஷயத்தில்

# மணியான மணி! என்று காண்போம் இனி?

மிகுந்த நம்பிக்கை உள்ளவராதலால் ஊருக்குப் புறப்பட ஒரு மணி ரெண்டு மணி முன்னதாகவே தயாராக இருப்பார். ''நான் ரெடி. நீங்கள் எப்போது என்னைப் புறப்படச் சொல்கிறீர்களோ, அப்போது புறப்படுகிறேன்'' என்பார் தகப்பனாரிடம்.

ஆகாரம் குறைவாகவே உண்பார். ஆனால் டிபன், சாப்பாடு எதுவானாலும் குறித்த நேரத்தில் சாப்பிட விரும்புவார். - அவை ருசியாக இருக்க வேண்டும்.

காலையில் குளித்து முடித்ததும் சுமார் 45 நிமிஷம் தியானம் செய்வார். எனக்குத் தெரிந்து அவர் எந்தக் கோயிலுக்கும், போக வேண்டும் என்று போனதே இல்லை.

வீட்டில் இருக்கிறபோது நன்றாகப் பாடுவார். வீட்டில் இருப்பவர்களிடம் பேசுகிறபோது உரத்த குரலில்தான் பேசுவார். படபடவென்று பேசுவார். கோபம் வந்து பார்த்ததேயில்லை. 'தினமணி'யும் 'தினத்தந்தி'யும் காலையில் படிப்பார். ஆனால் அரசியல் பற்றி வீட்டில் யாருடனும் பேசிப் பார்த்ததில்லை.

எப்போதும் கதர்தான் உடுத்துவார். வீட்டில் ரேடியோகூடக் கேட்க மாட்டார். ஜாதி மத வித்தியாசம் பார்க்க மாட்டார். எந்தக் குழந்தையையும் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்ச மாட்டாரே தவிர, பார்த்த உடனே பரிவுடன் புன்னகை செய்வார்.

## என் குருநாதர்
### சீடர் உமையாள்புரம் திரு சிவராமன்

"கும்பகோணத்தில் இருந்துகொண்டு மிருதங்க வித்வான் தஞ்சாவூர் ஸ்ரீ வைத்தியநாதய்யரிடம் மிருதங்கம் பயிலத் தொடங்கினேன். பிறகு அவர் இடீரென்று காலமாகி விடவே, தஞ்சாவூர் வைத்தியநாதய்யர் அவர்களின் சிஷ்ய பரம்பரையில் வந்த பாலக்காடு ஸ்ரீ மணிஅய்யர் அவர்களிடம் கற்றுக் கொள்ள யு. என். அண்டர் செக்ரடரி ஜெனரலாக இருந்த ஸ்ரீ வி. வி. நரசிம்மன் உதவியால் சிஷ்யனாகச் சேர்ந்தேன்.

ஸ்ரீ மணி அய்யர் அவர்கள் என்னைச் சென்னைக்கு வரச் சொன்னார். ''நிறையக் கச்சேரிகளுக்கு



உமையாள்புரம் சிவராமன்



சி. ஆர். சேஷன்

வாசிக்கலாம். நீ சௌக்கியமாக சிரேயசாக இருப்பாய்!'' என்று ஆசீர்வதித்தார்.

இது என் வாழ்க்கையில் ஏற்பட்ட முக்கிய திருப்பம் என்று சொல்லலாம்.

இதற்குப் பிறகு கோயமுத்தூரில் ஸ்ரீராம நவமி உற்சவத்தின்போது, அவருடன் தனியாக இருந்து மூன்று நான்கு மணி நேரம் அந்தரங்கமாகப் பேசும் சந்தர்ப்பம் கிடைத்தது.

பழைய வித்வான்களைப் பற்றி நிறைய எடுத்துச் சொன்னார். ''உலகத்தில் சிலபேர் புகழோடும் வசதியாகவும் இருப்பார்கள். அவர்கள் வாழ்க்கையைப் பார்த்துக் கற்றுக் கொண்டு, அவர்களை அநுசரித்து, சர்ச்சை, வாதங்களில் அநாவசியமாய் ஈடுபடாமல் வித்தையை விருத்தி செய்து கொண்டு பெயரோடும் புகழோடும் வாழ வேண்டும்!'' என்று சொல்லி ஆசீர்வதித்தார்.

தொழிலில் பயத்துடனும் விநயத்துடனும் நடந்து கொள்ள வேண்டும் என்பார். அநுசரித்து வாசிக்க வேண்டும் என்பார். தமது இறுதி மூச்சு வரை வாசித்துத் தமது புகழை நிலைநாட்டிய பெருசிலரில் ஒருவர் என் குரு ஸ்ரீ பாலக்காடு மணி அய்யர் அவர்கள்.

ஸ்ரீ மணி அய்யர் அவர்களின் வாசிப்பு கச்சேரிகளின் தரத்தையே மிக உயர்த்திக் காட்டியது. இறைமையான நுண்ணறிவும், முன்னடையும், சங்கீதத்துக்குத் தருந்தாற் போல் வாசிக்கும் சாமர்த்தியமும் கொண்டு, வித்வான்களையும், சபையோரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியவர்.

அவர் வாழ்க்கை என்போன்ற சிஷ்யர்களுக்கும் வித்வான்களுக்கும் ஆதர்சமாக விளங்குகிறது.

பேட்டி: எஸ். விசுவநாதன்

---

## ஒரு கேள்வி, ஒரு பதில்!

# பாடல்களுக்கு தடை ஏன்?

கேள்வி: நீங்கள் டைரக்ட் செய்துள்ள ''பாலைவனச் சோலை'' படத்தின் இரு பாடல்களை வானொலி ஒலிபரப்பாமல் தடை செய்திருக்கிறதே? இது பற்றி என்ன கூறுகிறீர்கள்?

ராபர்ட் — ராஜசேகரன் பதில்:

''இது எங்களின் கதை உங்களின் கதை'' என்ற பாடலில் கீழ்க்கண்ட வரிகள் வருகின்றன:

''இருப்பதை எடுப்பதும், பிரிப்பதும்
கொடுப்பதும் புதுயுக வரைமுறைகள்''

இந்த வரிகளில் கம்யூனிஸ வாடை வீசுவதாகக் கருதி அந்தப் பாடல் முழுவதையுமே தடைசெய்து விட்டார்கள். இங்கு கம்யூனிஸ்டுகளுக்குத் தடை இல்லாதபோது கம்யூனிஸ சித்தாந்தத்துக்கு மட்டும் எப்படி வானொலி தடை விதிக்க முடியும்? படத்தின் கதையின்படி வேலையில்லாமல் இருக்கும் வாலிபர்கள் பாடுவதாக அந்தப் பாடல் வருகிறது. வேலையில்லாத் திண்டாட்டம் பெருகினால் தற்கால இளைஞன் மனத்தில் இத்தகைய எண்ணங்கள்தான் ஏற்படும் என்று எச்சரிப்பது போல் அந்த வரிகள் எழுதப்பட்டிருக்கின்றன. இந்த மாதிரியான புதுமைச் சிந்தனைகளோடு கூடிய எத்தனையோ பாடல்களை வானொலி முன்பு ஒலிபரப்பியிருக்கிறது. அப்படியிருக்க இந்தப் பாடலைத் தடை செய்திருப்பதை நாங்கள் வன்மையாகக் கண்டிக்கிறோம்.

''பவுர்ணமி நேரம்'' என்று ஆரம்பிக்கும் பாடலில் பின்வரும் வரிகள் வானொலியின் தணிக்கைக்கு உள்ளாகின்றன.

''பவுர்ணமி நேரம் பாவை ஒருத்தி
மின்னல் போலே முன்னால் போனாள்
பின்னால் கண்டு பின்னால் சென்றேன்
பொண்ணு ஊருக்குப் புதுசோ என்றேன்
காலில் உள்ளது புதுசு என்றாள்
ஓ... மேலே கேட்காதே''

புது வருடம் பிறப்பதை யொட்டி நடக்கும் விருந்தில் அந்த இளைஞர்கள் மகிழ்ச்சியாக இந்தப் பாடலைப் பாடுவதாகப் படத்தில் வருகிறது. ஈவ் டீஸிங் செய்பவர்களை எச்சரிப்பது போல்தானே உள்ளது? இந்த வரிகளில் ஆட்சேபிக்க என்ன இருக்கிறது? இதற்குக் கல்கி வாசகர்கள்தான் பதில் தர வேண்டும்.

சென்சார் போர்டு மத்திய அரசால் நியமிக்கப்பட்ட ஒன்று. அப்படியிருக்க, அவர்கள் அனுமதிக்கும் காட்சிகள், பாடல்களை டி.வி. நிலையத்தாரும், வானொலியும் மறு தணிக்கை செய்வதை நாங்கள் வன்மையாகக் கண்டிக்கிறோம். இதே பாடலை மக்கள் விரும்பி ஒலிபெருக்கிகளில் ஒலிக்கச் செய்தால் தடை கிடையாது! தென்னிந்திய பிலிம் சேம்பர் இந்த விஷயத்தை எடுத்துக் கொண்டு அரசிடம் ஆட்சேபத்தைத் தெரிவிக்க வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்.

மற்றொரு வேடிக்கையான விஷயம் என்னவென்றால் படத்தின் விளம்பரத்தில், இந்த வரிகளை ஒலிபரப்பிக் கொண்டிருந்த வானொலி நிலையத்தினர் திடீரென்று விழித்துக்கொண்டு விளம்பரத்தையும் சென்சார் செய்ததுதான். இவர்களைத் தட்டிக் கேட்க வேண்டியவர்கள் மக்கள்தான்.

பேட்டி: ப்ரியன்



# கரம் பக்கோடா!



● ஓர் அலுவலகத்தில் நடந்த உண்மை நிகழ்ச்சி. கோப்பு காலதாமதமானது குறித்து எழுத்தருக்கும் மானேஜருக்கும் ஏற்பட்ட விவாதம் பெருங் கூச்சலாக மாற மானேஜர் மேலதிகாரியிடம் முறையிட, எழுத்தருக்குக் கிடைத்தது நல்ல 'டோஸ்'. மானேஜரைப் பழிவாங்க எண்ணிய எழுத்தர் அவர் அருகே பணிவுடன் சென்று அமர்ந்து அவர் காதோடு ''டேய்... ராஸ்கல்...இன்னொரு முறை இப்படிப் புகார் பண்ணினாய்...நடக்கிறது நல்லதா இருக்காது... ஜாக்கிரதை'' என கிசுகிசுத்து விட்டுத் திரும்பினாராம். பாவம், மானேஜர் காதோடு தான் திட்டப்பட்டதை யாரைச் சாட்சியாகக் கொண்டு மேலதிகாரியிடம் புகார் செய்ய முடியும்?

● நெல்லை மாவட்டத்தில் பல பேருந்துகளில் 'கைகள், தலையை வெளியே நீட்டாதீர்கள்' என்ற அறிவிப்பு. 'கரம், சிரம் புறம் நீட்டாதீர்கள்' என அடுக்கு மொழியில் காணப்படுகிறது.

● சென்னை சட்டசபை அருகே ஒரு சுரங்கப் பாதை உள்ளது. இப்பாதை கடற்கரை மின்வண்டி நிலையம் எதிரே உள்ள மாநில வங்கி தலைமையகம்வரை செல்லுகிறது.

● சென்னையின் மசால் வடை நெல்லை ஹோட்டல்களில் 'ஆமைவடை' என அழைக்கப்படுகிறது.

● 'ஒரு தொழிற்சாலை வாசலில் கண்ட சம்பவம் – வேலை முடிந்து வீடு திரும்பும் ஒவ்வொரு தொழிலாளர் உடலையும் தடவிப் பார்த்து வெளியே அனுப்பிக்கொண்டிருந்த காவலாளி திடீரென்று ஒரு தொழிலாளியின் சட்டையைக் கழற்றச் சொன்னார். சட்டை கழற்றப்பட்டதும், அத்தொழிலாளியின் வயிறோடு வயிறாக மெல்லிய கயிற்றால் கட்டப்பட்ட ஒரு 'ஸ்பேனர்' பார்வையில் படவே அத்தொழிலாளி மீது திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டபோது தனக்குக் காக்காய் வலிப்பு அடிக்கடி வருவதுண்டு எனவும் அதை வருமுன் தடுக்க உடலோடு இரும்பை–ஸ்பானரைக் கட்டி வைத்ததாகவும் தொழி



லாளி கூற அங்கே வந்த மானேஜர், ''உன்னை நம்புகிறேன். நீ திருடினாய் என்று நான் கருதவில்லை. ஆனால் காக்காய் வலிப்பு கொண்ட நீ இயந்திரங்களின் நடுவே வேலை செய்வது ஆபத்து. அதனால் நாளை முதல் நீ வேலைக்கு வரவேண்டாம்'' என்று ஒரு போடு போட்டாரே பார்க்கலாம்.

–யெம்ஜி






# பாரதி கண்ட இளைய பாரதம்



**பா**ரதி படைக்க விரும்பியது சாதிகளற்ற புதிய சமுதாயம். அதனால் பழைய பாரதம் படைத்துவிட்ட சாதி வேறுபாடுகளுக்குச் சாபம் கொடுக்கிறான். 'ஜாதி நூறு சொல்லுவாய் போ, போ, போ!' என்று கூறி விரட்டுகிறான். இன்னும் எத்தனையோ அருவருக்கத்தக்க அம்சங்களைப் பட்டியலிட்டு விரட்டியவன் சுவையானதாக இன்னொன்றையும் சொல்லுகின்றான்.

'நீதி நூறு சொல்லுவாய்
  காசு ஒன்று
நீட்டினால் வணங்குவாய்
  போ, போ, போ!'

இது லஞ்சம் வாங்கிப் பிழைக்கும் கும்பலுக்கு அன்றே பாரதி தந்த சாபம்! கை கனக்க லஞ்சம் வாங்குவோர், வாய் மணக்க நீதிகளைப் பேசுவார்களாம். செய்வது ஜனத் துரோகம், பேசுவதோ, ஜனநாயகம்! பேசுகின்ற அவ்வளவு நீதிகளையும் ஒரு காசுக்கு விற்றுவிடுவார்களாம்! இன்று பாரதி வாழ்ந்திருந்தால், என்ன சொல்லிச் சபித்திருப்பானோ!

பாவம்! பழைய பாரதத்தைச் சபித்த பாரதியாருக்கு அதனிடம் பச்சாதாபமும் பிறக்கிறது. அதனால் பழைய பாரதம் தன் சாபத்தைப் பெருமளவுக்குப் பாழ்பட்டுப் போனதற்கான காரணத்தையும் அவனே சொல்லுகிறான்.

'சோதிமிக்க மணியிலே
  காலத்தால்
சூழ்ந்த மாசு போன்றனை
  போ, போ, போ!'

இது, பாரதி கூறும் சமாதானமும் அவன் இறுதியாகத் தரும் சாப மொழியுமாகும். நமது பாரதம் சோதிமிக்க மாணிக்கமாம்! இருந்தும், காலக் கோளாறு காரணமாக மாசுபட்டு விட்டதாம். அது என்ன காலம்? பரங்கியர் ஆண்ட காலம்.

தொடர்ந்து, ''வருகின்ற பாரதத்துக்கு வாழ்த்து'' என்னும் பாடலிலே பாரதியார் குறைபாடற்ற ஒரு புதிய பாரதத்தைத் தாமும் கண்டு, நமக்கும் காட்டுகிறார். ஆம்;

ஒளிபடைத்த கண்ணும்,
உறுதிகொண்ட நெஞ்சும்,
களிபடைத்த மொழியும்,
கடுமைகொண்ட தோளும்,
தெளிவுபெற்ற மதியும்,
ஏறுபோன்ற நடையும்.

மொத்தத்தில் நல்ல ஆரோக்கியம் உடைய இளைய பாரதத்தை ''வா, வா, வா,'' என்று கூறி, வரவேற்று வாழ்த்துகின்றார்.

பாரதம் பரங்கியருக்கு அடிமைப்பட்டது தெய்வத்தின் சாபத்தால்தான் என்கிறார் பாரதியார். கட்டுரை ஒன்றிலே ''தேவர்கள் இந்தப் பாரத ஜாதியைக் கொஞ்சம் செல்லரிக்கக் கடவது என்று ஆசீர்வதித்தார்கள்'' என்று கூறுகிறார். ஆம்; சபித்தார்கள் என்னும் பொருளிலே ஆசீர்வதித்தார்கள் என்கிறார்.

அந்தச் சாபம் நீங்கி, புதிய பாரதம் பிறந்து விட்டதாம்! அதனால்,

''தெய்வ சாபம்
  நீங்கவே – நங்கள் சீர்த்
தேசமீது தோன்றுவாய்
  வா, வா, வா!''

என்று இதய எழுச்சியோடு பாடுகின்றார்.

ஆங்கிலேயருக்கு அடிமைப்பட்டுக் கிடந்த காலத்திலே பாரதத்தில் எங்கும் இருள் கவிந்திருந்தது. ஆம்; அடிமையிருள் நள்ளிரவாய் அகன்று மூடியிருந்தது. பகல் பொழுதே தோன்றாமல் இரவு நீடித்து நிலைத்துப் போயிருந்தது. அந்த அடிமை யிருளைக் கிழித்து வெளிப்பட்ட இளைய பாரதத்தை,

''ஒளியிழந்த நாட்டிலே
  –நின்றேறும்
உதயஞாயி றொப்பவே
  வா, வா, வா!''

என்று கூறி வரவேற்கின்றார்.

பாரத மக்களிடையில் ஒற்றுமை இல்லாததால்தான் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி, பிரெஞ்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி, டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனி, போர்ச்சுக்கீசியக் கிழக்கிந்தியக் கம்பெனி என ஐரோப்பியக் கம்பெனிகளெல்லாம் புகுந்து அகப்பட்ட வரை சுருட்டின! இப்போது பாரதம் அடிமை இருளகன்று விடுதலை ஒளி பெற்றுவிட்டதானால்,

''ஒற்றுமைக் குய்யவே
  –நாடெல்லாம்
ஒருபெருஞ்செயல் செய்வாய்
  வா, வா, வா!''

என்று பாடுகின்றார். இவ்வளவும் பாரதியார் சுதந்திர பாரதத்தைக் கண்ணாரக் கண்டு பாடியதல்ல; கற்பனை செய்து கொண்டு பாடியது!

ம.பொ.சி

(மயிலை இலக்கிய வட்டம், பாரதீய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# Only for those who like to be sure






The VIP label. Your guarantee of comfort and confidence. Confidence that your anatomy demands from scientifically designed underwear.

Made from the choicest fabric. With the softness, the smoothness... and the feel that gives the VIP feeling.

Durable underwear from VIP. A complete price range... because every person is important.

CASHH-1-203




Distributors for the State of Tamil Nadu

**Modern Distributors, 21, Balfour Road, Kilpauk (Near Kellys), Madras-600 010**

REGISTERED No. M. 4362
Registered as a Newspaper in Sri Lanka